# கல்வெட்டு

*Kalvettu*

## திருவள்ளுவர் ஆண்டு 2041 தைத் திங்கள்



திருநெல்வேலி மாவட்டம் இராஜாக்கள் மங்கலத்தில்
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை மேற்கொள்ளும்
அகழாய்வுப் பணியினை 20-05-2010 அன்று
மாண்புமிகு பள்ளிக் கல்வி (ம) தொல்லியல் துறை அமைச்சர்
**திரு. தங்கம் தென்னரசு** அவர்கள் தொடங்கி வைத்தார்

கல்வெட்டு - காலாண்டிதழ் - 80 (ஜனவரி 2010) விலை : ரூ. 10.00
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

# உள்ளே



கட்டுரைகளில் சொல்லப்படும் கருத்துக்களுக்கு கட்டுரை ஆசிரியர்களே பொறுப்பாவர்


தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் அச்சகத்தில் அச்சிட்டு இத்துறை
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர் முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இஆப., அவர்கள் சார்பாக
கல்வெட்டாய்வாளர் கி. சு. சம்பத் அவர்களால் வெளியிடப்பெற்றது.
இணையதளம் www.tnarch.gov.in
மின் அஞ்சல் tnarch@tn.nic.in

முனைவர் **தி.ஸ்ரீ.ஸ்ரீதர்,** இ.ஆ.ப,
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்
தொல்லியல் துறை



தமிழ் வளர்ச்சி வளாகம்,
ஆல்சு சாலை, எழும்பூர்,
சென்னை - 600 008.
நாள் : 14-07-2010

# பதிப்புரை

தமிழகத்தின் வரலாற்றினை மிகச் சரியாக எழுத துணைபுரியும் முதன்மைச் சான்றுகளான கல்வெட்டுகள், அகழாய்வுத் தொல்பொருட்கள், காசுகள், செப்பேடுகள் போன்றவை தமிழகமெங்கும் பரவிக் கிடைக்கின்றன. தொல்லியல் சான்றுகளை அடிப்படையாக வைத்து எழுதப்படும் கட்டுரைகள் இத்துறையின் 'கல்வெட்டு' காலாண்டிதழ்களில் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன. தொல்லியல் துறையின் 80–ஆவது இதழாக வெளிவரும் இக்காலாண்டிதழ் அடிப்படைச் சான்றுகளைக் கொண்டு எழுதப்பட்ட கட்டுரைகள் மற்றும் செய்திகளின் தொகுப்பாகும்.

சைவசமயக் குரவர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர்களுக்கும் திருபாச்சூரில் திருவிழா எடுக்கப்பட்டுள்ளதை கல்வெட்டு ஆதாரத்துடன் தெரிவிக்கும் கட்டுரை இடம்பெற்றுள்ளது. மக்களின் உயிரையும் உடமையையும் காப்பாற்றுவதற்கு 'அஞ்சினான் புகலிடம்' என்னும் புகலிடங்கள் இருந்தன என்பதை பல்வேறு இலக்கிய மற்றும் வரலாற்றுச் சான்றுகளுடன் எடுத்துரைக்கும் கட்டுரை ஒன்றும் இடம்பெற்றுள்ளது. வட்டெழுத்து வணிகர் தந்தது என்று ஆதாரங்களுடன் விளக்கும் கட்டுரை ஒன்றும் இடம் பெற்றுள்ளது. மேலும் கி.பி. 1714–ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட 'விஜயரகுநாத சேதுபதியின் செப்பேடு', வேலூருக்கு அருகிலுள்ள 'கரிகிரி கோட்டை', 'விளாங்காடுபாக்கம் கல்வெட்டு' மற்றும் 'எண்பட்டை வடிவிலான 50 டாலர் தங்கக்காசு' பற்றிய ஆங்கிலக் கட்டுரை ஆகியவை இந்த இதழில் இடம்பெற்றுள்ளன.

இவ்விதழ் பதிப்புப் பணியினை இத்துறை கல்வெட்டாய்வாளர் திரு. கி. சு. சம்பத் இவ்விதழுக்கு அட்டைப்படம் வடிவமைத்த திருமதி. தே.சத்தியவதி, அச்சுப்பிழைதிருத்திய திருமதி கோ. செம்மலர் மற்றும் அச்சுப்பணியினை மேற்கொண்ட அச்சுப்பிரிவினருக்கும் எனது பாராட்டுக்கள். இக்கல்வெட்டு காலாண்டிதழிலுள்ள கட்டுரைகள் மற்றும் செய்திகள் தொல்லியல், வரலாற்று ஆய்வாளர்கள் மற்றும் மாணவர்களுக்கு பயனுள்ளவையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

**தி.ஸ்ரீ.ஸ்ரீதர்**

1

# திருப்பாச்சூர் – நால்வர் திருவிழா கல்வெட்டு

முனைவர் **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்,** இ.ஆ.ப,
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்
**இரா. சிவானந்தம்**
கல்வெட்டாய்வாளர்

திருவள்ளூர் மாவட்டம், திருவள்ளூரிலிருந்து திருத்தணி செல்லும் சாலையில் 2. கி.மீ தொலைவில் திருப்பாச்சூர் என்னும் ஊர் அமைந்துள்ளது. திருப்பாச்சூரில் வாசீசுவரர் கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. தொண்டை நாட்டில் தேவாரப்பாடல் பெற்ற தலங்கள் முப்பத்திரண்டில் பதினாறாவது தலமாக இத்தலம் விளங்குகிறது. இவ்வூர் இறைவனைப் போற்றி தேவார மூவரில் முதல் இருவர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரும் முறையே ஒரு பதிகம் பாடியுள்ளனர்.

பாசு என்பது மூங்கிலைக் குறிக்கிறது. பண்டைக் காலத்தில் மூங்கில் நிறைந்த வனமாய் இருந்ததனால் பாசூர் என இவ்வூருக்கு பெயர் உண்டாயிற்று எனலாம். மேலும் இக்கோயிலின் இறையனார் காபாலிக மூர்த்தியாய் சம்பந்தர் மற்றும் அப்பரால் வருணிக்கப்படுகிறார். காபாலிகர்களின் செயல்களான சாம்பல் பூசுதல், கபாலம் ஏந்தல், கையில் நாகத்தலைக் கொண்ட சூலம் ஏந்தல் போன்ற அடிகள் இருவரின் பதிகங்களிலும் விரவிக்கிடக்கின்றன.

சம்பந்தரின் இரண்டாம் திருமுறையில் 'சிந்தையிடையார்' எனத்தொடங்கும் பதிகத்தில் 'தங்காதலியும் தாமும் வாழும் ஊர்போலும்' என்ற வரியினைக் கொண்டு தங்காதலி என்ற பெயர் அம்பிகைக்கு இங்கு வழங்கப்படுகிறது. 'வாடல் தலையில் பலிதேர் கையார் ஊர்போலும்', 'செகுவாய் உகுபல் தலைசேர் கையார் ஊர்போலும்', 'நாகம் கச்சாக', 'பொங்காடரவும் புனலும் சடைமேல் பொலிவெய்த', 'ஆடல்புரியும் ஐவாய் அரவொன்று அரைச்சாத்தும்','ஊரும்அரவம் உடையார் வாழும் ஊர்போலும்', 'பைவாய் நாகம் கோடல் எனும் பாசூரே' போன்ற சம்பந்தரின் பாடல் வரிகள் இவ்வூர் காபாலிகசமயம் விளங்கும் ஊராக இருந்ததையும், இறைவன் காபாலிக இலச்சினை களோடு கூறப்படுவதால் இக்கோயில் காபாலிகர் தங்கி வழிபடும் தலமாக இருந்ததையும் உறுதிப்படுத்துகிறது. மேலும் இதற்கு சான்று பகர்வதாய், அப்பரின் ஐந்தாம் திருமுறையில், 'படர்ந்த நாகத்தர் பாசூர் அடிகள்', நீளரவந்தனை பற்றி

யாட்டுவர் பாசூர் அடிகளே 'கையதோர் சூலத்தர்', பாறின் ஓட்டினர் பாசூர் அடிகளே' 'பாம்பும் ஆட்டுவர் பாசூர் அடிகளே' போன்ற வரிகள் அமைந்துள்ளன. 'மட்டவிழ்ந்த மலர் நெடுங்கண்ணிபால் இட்ட வேட்கையர் ஆகிய இருப்பவர்' என்ற அப்பரின் அடிகளால் மது, மங்கையை முதலாகக் கொண்ட கபாலிக தாந்திரீகம் இங்கு நிலவியதையும், 'வெற்றியூருறை வேதியர் ஆவர்' எனக் குறிப்பிடுவதிலிருந்து திருவொற்றியூரின் சோமசித்தாந்த கபாலிக இறைவனே இங்கும் குடிகொண்டிருந்ததையும் உணரலாம்.

மகாமண்டபத்தின் இடதுபுறத்தில் கற்பீடத்தில் தனிச்சிற்பங்கள் அமைந்துள்ளன. இச்சிற்பங்களில் கௌமாரி நீங்கலாக உள்ள அன்னையர் அறுவரும் வடக்குமுகமாகவும், வீரபத்திரர் மேற்குமுகமாகவும், நால்வரின் நின்ற நிலை வடிவங்கள் வடக்குமுகமாகவும் உள்ளன. இச்சிற்பத் தொகுதியினைத் தொடர்ந்து, பீடத்தின் மீது நீண்ட செவ்வக வடிவ கற்பலகையொன்றில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டொன்று உள்ளது.

செவ்வக கற்பலகையின் மேற்பகுதியில் நந்தியுடன் கூடிய லிங்கமும், அதற்கு கீழே நால்வர் உருவமும் புடைப்புச் சிற்பமாக உள்ளன. அதனையடுத்து உள்ள கல்வெட்டு வாசகங்கள், இத்திருக்கோயிலின் நால்வர்க்கு நித்தியபூசனை மற்றும் திருநட்சத்திர உத்சவங்கள் நடத்த ந. அய்யாச்சாமி என்பவரின் மனைவி பவானி அம்மாள் என்பவரால் வழங்கப்பட்ட நிலக்கொடைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

1. திருப்பாச்சூரில் ஸ்ரீவாசி
2. ஸ்வரர் சன்னதியில் எ
3. ழுந்தருளிக்கிர நால்வர்
4. களுக்கு நித்தியபூசை வரு
5. வாரி திருநக்ஷத்திர உச்சவங்
6. கள் சாஸ்விதமாயி நடத்து
7. ம் பொருட்டு 70வது நெ. ஜமி
8. ன் சிருவானூரில் ந. பெரியவாசி
9. வட்டம் சின்னவாசி வட்டம்
10. ம் பு. களத்துமேட்டு கொல்லை
11. ஆ.ந. 42.12.14 வுள்ள நில
12. ங்களை ஷ கயிங்கரியத்திற்கா
13. கவே 1892 12.17. நான் உயில்
14. சாசனமூலமாயி அற்பணம்
15. செய்து செங்கல்பட்டைச் சார்ந்
16. த திருவள்ளூர் சப்ரிஜிஸ்தாராபிசில்
17. 1892.12.22 பதிவு போட்டிருப்
18. பதால் ஷ நிலங்களை எப்போதும்
19. எவர்களாலும் அபகரிக்க வேண்டாம்

ந. அய்யாச்சாமி மு - பாரியாள் பவானி அம்மாள்

இக்கல்வெட்டு, இற்றைக்கு 118 ஆண்டுகளுக்கு முன் நால்வர்க்கு உத்சவங்கள் நிகழ, இப்பகுதியில் அதிகமாக காணப்படும் முதலியார் சமூகத்தவரின் அறப்பணியை விளக்குகிறது. சிவனடியார்களை சிவனாகவே எண்ணி உத்சவங்கள் நடத்தும் மரபு பண்டையக் காலத்திலிருந்து இன்று வரை தொடர்வதற்கு இக்கல்வெட்டு ஒரு சான்று.

சைவசமயக் குரவர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரது பெயர்களில் மடங்கள், குகைகள் இருந்தமையை கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. கி.பி 7-8-ஆம் நூற்றாண்டு தொடங்கி இன்று வரை நால்வர்களுக்கு சிறப்பு அளிக்கப்பட்டு வருகின்றது. கோயில்களில் அவர்களுக்கென்று செப்புத் திருமேனிகள் அமைக்கப்பட்டுள்ளன. மேலும் 63 நாயன்மார் சிற்பங்களையும் கோயில்களில் அமைத்து வழிபட்டு வருகின்றனர்.

இக்கோயிலில் நால்வர் திருவிழா நடைபெற நிலக்கொடை அளித்து சிறப்பித்துள்ளனர். அதேபோல் இன்றும் சென்னை மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயில் அறுபத்து மூவருக்கும் திருவிழா எடுப்பது ஒப்புநோக்கத் தக்கதாகும்.



# 2

# விளாங்காடுபாக்கம்

முனைவர் **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்**, இஆப,
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்
**இரா. சிவானந்தம்**
கல்வெட்டாய்வாளர்

திருவள்ளூர் மாவட்டம் பொன்னேரி வட்டத்தில் 'விளாங்காடுபாக்கம்' என்னும் ஊர் அமைந்துள்ளது. வன்தொண்டர் என்றழைக்கப்படும் சுந்தரமூர்த்தி நாயனார் திருவொற்றியூரில் மணம்புரிந்த சங்கிலி நாச்சியார் பிறந்த ஊரான "ஞாயிறு" எனும் ஊருக்கு அருகில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரில் இலவபுரீஸ்வரர் என்னும் சிவன் கோயில், பெருமாள் கோயில், சமணர் கோயில் ஆகியவை உள்ளன.

## இலவபுரீஸ்வரர் கோயில்

கருவறை, அர்த்தமண்டபம் என்ற அமைப்புடன் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இக்கோயில் விமானம் இரு தளங்களுடன் திராவிடப்பாணியில் காணப்படுகிறது. இக்கோயிலின் திருச்சுற்றில் 27 தூண்கள் உள்ளன. இத்தூண்கள் எட்டுப்பட்டையுடன் வெட்டுப் போதிகையாக விளங்குகின்றன. விமானத்தின் உபபீடப்பகுதி மட்டும் பண்டைய அமைப்பிலும் ஏனையப் பகுதிகள் தற்காலக் கட்டட அமைதியில் அமைக்கப்பட்டுள்ளன.

கருவறை தென்புறத் தேவகோட்டத்தில் தென்முகக் கடவுளான தட்சணாமூர்த்தி ஆலமரத்தின் கீழ் வீராசனத்தின் வீற்றுள்ளார். தலையில் சடாமுடி தரித்து நான்கு கரங்களுடன் உள்ளார். மேல் இடது கரத்தில் தீச்சட்டியும் மேல் வலது கரத்தில் பாம்பும் கீழிரு கரங்களில் வலது கரம் சின்முத்திரையுடனும் இடது கரம் புத்தகம் தாங்கியபடியும் உள்ளாள்.

திருமால் மேற்குபுற தேவகோட்டத்தில் சமபங்க நின்ற நிலையில் நான்கு கரங்களுடன் உள்ளார். மேலிரு கரங்களில் சங்கு, சக்கரமும், கீழிரு கரங்களில் இடது கரம் ஊருஹஸ்த முத்திரையிலும் வலது கரம் அபய முத்திரையிலும் அருள் பாலிக்கிறார். தலையில் கிரீட மகுடம், கணுக்கால் வரை ஆடையும் அலங்கரிக்கின்றன.

வடக்குப்புறத் தேவக்கோட்டத்தில் நான்முகனான பிரம்மன் சமபங்க நிலையில் நான்கு கரங்களுடன் நின்ற நிலையில் காணப்படுகிறார். மேலிரு கரங்களில் அக்கமாலை, கெண்டியும், கீழிரு கரங்கள் அபயம், ஊருஹஸ்த முத்திரை கொண்டு விளங்குகிறார்.

அம்மனுக்கென்றுத் தனிச் சன்னதி அமைந்துள்ளது. இச்சன்னதி தேவக்கோட்டங்களில் சங்கரி, மகேஸ்வரி, வைஷ்ணவி, பிராமி, துர்க்கை ஆகிய உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் மேற்கு நோக்கி சூரியன், சந்திரன் சிற்பங்கள் உள்ளன. கிழக்குப் பகுதியில் தொடங்கி தெற்குப் பகுதி திருச்சுற்றில் 63 நாயன்மார்கள் சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. இந்நாயன்மார்கள் சிற்பங்கள் ஒவ்வொன்றின் பீடத்திலும் அந்நாயன்மார்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளது சிறப்பம்சமாகும்.

இக்கோயிலில் உள்ள அனைத்துச் சிற்பங்களும் கி.பி. 18-19-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனலாம். கருவறை விமானத்தின் உபபீடப்பகுதி மற்றும் திருச்சுற்றுத் தூண்கள் சோழர் கால அமைதியில் உள்ளன. எனவே இக்கோயில் 18-19-ஆம் நூற்றாண்டில் முழுவதுமாக புணரமைக்கப்பட்டு புதிய கட்டுமானத்துடன் எழுப்பியிருக்க வேண்டும்.

சிதைந்த நிலையிலுள்ள இக்கோயில் வெளிப்புற வளாகத்தில் துண்டு கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. இக்கல்வெட்டு எழுத்தமைதியைக் கொண்டு கி.பி 18-19-ஆம் நூற்றாண்டு எனலாம். பெருமாள் கோயிலுக்கு கட்டளை ஒன்று ஏற்படுத்தி நிலம் சறுவமானியமாக வழங்கியச் செய்தியைக் கூறுகிறது.

## பெருமாள் கோயில்

சிவன் கோயிலுக்கு மேற்குப் பகுதியில் பெருமாள் கோயில் ஒன்று உள்ளது. இக்கோயில் உபபீடம் முதல் செங்கற் தளியாக உள்ளது. சதுர வடிவிலான இக்கருவறையில் திருமால், பூமகள், திருமகள் ஆகிய மூவரும் நின்றநிலையில் காட்சியளிக்கின்றனர். கோயில் எதிரே கருடன் சிற்பம் நின்றநிலையில் காணப்படுகிறது. இக்கோயில் வளாகத்தினைச் சீர் செய்யும் போது உடைந்த தூணின் பகுதி ஒன்று கண்டெடுக்கப்பட்டது. இதில் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் தொடக்கப் பகுதியில்லாத கல்வெட்டொன்று உள்ளது.

### *கல்வெட்டு வாசகம்*

1. . . கள் கொண்டு
2. . . பொன் பன்னி
3. . . யான் கொண்டு
4. . . . . பண்ணிக்கு
5. பொன்னுக்கும் . . .

6. பொலியூட்டாக நிசதி உழ
7. . . . நிசதி
8. . . ஊட்டவொ
9. . ஸஹெயொம் ஆ
10. . .
11. உஜூஜ்ஹூதம்
12. . .
13. நிசதி மும் ஊட்டுவார்கள
14. குடுத்தோம் ஸஹெயொம்
15. . . . கால இரு இப்பரிசு ஊட்
16. டுவொம் ஆன்னொம் ஸஹெ
17. யொம் . . ஆன . . .
18. .
19. இது முட்டில் ஸஹெ
20. . . இருபத்து நாலு
21. . .
22. ட்டிகுடுத்தொம் ஸஹெயொம்
23. க்கும் இவ முட்
24.
25. ஒட்டி குடுத்தொம் ஸஹெயொம்
26.
27. நிசதி இரண்டு சொறு
28. அன்றாளுகொவுக்கும் படுவதாகவும்
29. வும் ஒட்டி குடு[த்தொம]ம் ஸஹெ

இக்கல்வெட்டில் பன்னிரெண்டு பொன் அளித்து அதனிலிருந்து வரும் வட்டியைக் கொண்டு தினமும் உணவளிக்க(?) இவ்வூர் சபையார் வழிவகை செய்துள்ளதை தெரிவிக்கிறது.

(குறிப்பு : இக்கல்வெட்டு தொல்லியல் துறை முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர் முனைவர் **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்**, இஆப, அவர்களால் கள ஆய்வின்போது கண்டறியப்பட்டது.)



# 3

# வரமணகுண்டா - கல்திட்டைகள்

**முனைவர் தி. சுப்பிரமணியன்**
தொல்லியல் அலுவலர், தருமபுரி

"மானிடர் ஆன்மா மாய்வதில்லை, மறுபடியும் பிறந்திருக்கும்" என்பது தத்துவம். இந்த தத்துவக் கோட்பாடு சமயங்கள் வளர்ச்சியடைந்த காலத்தில் மக்களிடையே பரவியது. ஆனால் இந்த கோட்பாட்டின் துவக்கம் பெருங்கற்காலம் என்று அழைக்கப்படும் நாகரீகக் காலத்திற்கு முன்பிருந்து காணப்படுகின்றது. சுமார் 3000 ஆண்டுகளுக்கு முன்பிருந்து இக்கோட்பாட்டின் வித்துக்கள் இருந்ததற்கான தடயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இதை "ஆன்றோர் வணக்கம்" அல்லது "மூதாதையர் வழிபாடு" என்று பிற்காலத்தில் பெயரிடப்பட்டு அழைக்கப்படுகின்றது.[1] மூதாதையர்களை வழிபடுகின்ற வழக்கம் தமிழகத்தில் மட்டுமின்றி உலகிலுள்ள பெரும்பாலான நாடுகளில் காணப்படுகின்றது. இத்தகைய மூதாதையர் வழிபாடு (Anciester worship) பெருங்கற்கால சின்னங்களாகக் காணப்படுகின்றன.

பல தொல்லியல் ஆய்வாளர்களும், மானிடவியல் ஆய்வாளர்களும் பெருங்கற்கால நினைவுச் சின்னங்களை ஆய்வுச்செய்து அவர்களுடைய முடிவினை வெளியிட்டுள்ளனர். இந்த ஆய்வு சுமார் 170 ஆண்டுகளுக்கு முன்பிருந்து நடைபெற்று வருகின்றது.[2] தொடக்க காலத்தில் பெருங்கற்கால சின்னங்களுக்கு பெயரிடுவதில் பல குழப்பங்கள் நிலவியது. பின்னர் தொல்லியல் ஆய்வாளர்கள் ஒவ்வொரு பகுதியையும் முறையாக ஆய்வுச் செய்து சின்னங்களின் அமைப்பு, தோற்றம் ஆகியவற்றின் அடிப்படையில் இச்சின்னங்கள் வகைப்படுத்தப்பட்டன. ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு வகையான சின்னங்கள் இருப்பது தெரியவந்தது எனவே பெருங்கற்கால சின்னங்களை கல்லறை, கல்வட்டம், தாழி, பேழை, கல்திட்டை என்று பல வகைப்படுத்தப்பட்டன.

கிருட்டிணகிரி மாவட்டத்தில் பலவகையான பெருங்கற்கால நினைவுச் சின்னங்கள் கலந்து காணப்படுகின்றன. கல்வட்டம், கல்திட்டை ஆகிய இரண்டு வகையைச் சார்ந்த நினைவுச் சின்னங்கள் அதிக அளவில் உள்ளன. கல்வட்ட வகையைச் சார்ந்த நினைவுச் சின்னங்கள் கிருட்டிணகிரி மாவட்டத்தைத் தவிர தமிழகத்தின் மற்றபகுதிகளிலும் பரவலாகக் காண்ப்படுகின்றது. ஆனால் கல்திட்டை

(Dolmen) வகையைச் சார்ந்த சின்னங்கள் கிருட்டிணகிரி மாவட்டத்தில் மட்டும் அதிக அளவில் உள்ளன. மல்லசந்திரம், மகாராஜ கடை, சென்னசந்திரம், தளி, அண்டமார், வரமணகுண்டா போன்றவற்றை உதாரணமாகக் கூறலாம்.[3]

## வரமண குண்டா

கிருட்டிணகிரி மாவட்டம் கிருட்டிணகிரியிலிருந்து ஒப்பதவாடி வழியாக குப்பம் செல்லும் சாலையில் 25 கி.மீ. தொலைவில் வரமணகுண்டா என்ற ஊர் உள்ளது. இவ்வூரிலிருந்து 1. கி.மீ. தொலைவில் காட்டுப் பகுதியில் பெருங்கற்காலச் சின்னங்கள் காணப்படுகின்றன. இந்த பெருங்கற்கால நினைவுச் சின்னங்களை இப்பகுதி மக்கள் "பாண்டவர் பண்டா" என்றும் "பாண்டவர் குட்டை" என்றும் அழைக்கின்றனர். கல்திட்டைகள் மேடான பகுதியில் அமைந்துள்ளன. இந்த கல்திட்டை அமைந்துள்ள பகுதியைச் சுற்றிலும் மலை சூழ்ந்துள்ளன. இதன் அருகில் காட்டாறு என்னும் சிற்றோடை ஒன்று ஓடுகின்றது. இங்கு 100 கல்திட்டைகளும் கல்வட்டவகையைச் சார்ந்த சின்னங்களும் காணப்படுகின்றன.

## கல்திட்டைகள் (Dolmens)

கல்திட்டை என்பது இயற்கையாக அமைந்த பரந்து விரிந்த பாறையின் மேல் அமைக்கப்பட்டுள்ள நினைவுச் சின்னமாகும். இயற்கையாக அல்லது செயற்கை யாகக் கிடைக்கும் நான்கு பலகைக் கற்களை பாறையின் மேல் நிறுத்தி, அவை சாய்ந்து விடாமல் இருக்க ஒன்றுடன் ஒன்றை இணைத்து அல்லது ஒன்றை ஒன்று தாங்குகின்ற அமைப்பில் நிறுத்தப்பட்டுள்ளன. நான்கு பலகைக் கற்களின் மேல் பெரிய மூடுகல் ஒன்றை வைத்து கல்லறை உருவாக்கப்பட்டுள்ளது. ஒரு பலகைக் கல் மற்றொரு பலகைக் கல்லை தாங்குவதற்காக சிறிது தள்ளி நிறுத்தப் பட்டுள்ளதால் நான்கு பக்கங்களிலும் பலகைக் கற்களின் ஒரு முனை பகுதி நீட்டிய நிலையில் உள்ளதால் இதன் அமைப்பு "ஸ்வஸ்திகா" போன்ற அமைப்பில் காணப்படுகின்றது. இக்கல்லறை சாய்ந்து விடாமல் இருக்க கல்லறையைச் சுற்றிலும் சிறிய கற்கள் நிறுத்தப்பட்டுள்ளன. இத்தகைய தாங்கு கற்பலகைகள் செவ்வக வடிவில் உள்ளன. செவ்வக வடிவக் கல்லறையைச் சுற்றிலும் சிறிய கற்கள் வட்ட வடிவில் வைக்கப்பட்டுள்ளன. இத்தகைய கல் திட்டைகள் தரைமட்டத்திலிருந்து சுமார் 1 மீட்டர் முதல் 3 மீட்டர் வரை உயரமாகக் காட்சியளிக்கின்றன.

## இடுதுளை

கல்லறையின் கிழக்குப் பக்கமுள்ள பலகைக் கல்லில் இடுதுளை எனப்படும் வட்டவடிவ துவாரம் ஒன்று காணப்படுகின்றது. வரமணகுண்டாவில் உள்ள பெரும்பாலான இடுதுளைகள் வட்டவடிவில் உள்ளன. இடுதுளை என்பது பெருங்கற்கால நினைவுச் சின்னங்களை உருவாக்கிய தொடக்க நிலையில் இல்லை. பின்னர் இது வளர்ந்து பலவடிவங்களில் உருவாக்கப்பட்டுள்ளன. தொடக்ககால நினைவுச் சின்னங்களில் ஒரு பகுதியில் சிறிய இடைவெளிவிட்டு கல்லறைகள் உருவாக்கப்பட்டன. பின்னர் இடுதுளை எந்த பகுதியில் வேண்டுமானாலும் இருக்கலாம் என்ற நிலையில் வடக்கு, தெற்கு பகுதியில் சிறிய

இடைவெளிவிடப்பட்டது. பின்னர் இடுதுளை கல்லறையின் கிழக்கு பகுதியில் மட்டும் இருக்க வேண்டும் என்ற எண்ணம் அல்லது கருத்து நிலவியதால் கிழக்குப் பகுதியில் இடப்பட்டுள்ளது. தமிழகத்தில் உள்ள பெரும்பாலான நினைவுச் சின்னங்களில் கிழக்கு பகுதியில் இடுதுளை உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. சில இடங்களில் இதில் மாற்றங்கள் காணப்படுகின்றன. உதாரணமாக ஒரு பெரிய பெருங்கற்கால நினைவுச் சின்னத்தைச் சுற்றிலும் பல சிறிய நினைவுச் சின்னங்கள் எடுக்கப்பட்டுள்ள இடங்களில் மாற்றங்கள் காணப்படுகின்றன. மையப்பகுதியில் உள்ள சின்னத்தில் இடுதுளை கிழக்கு பக்கமுள்ள பலகைக் கல்லிலும் இதைச் சுற்றியுள்ள சிறிய கல்லறைகளில் மற்ற திசைகளிலும் காணப்படுகின்றன. இந்த அமைப்பு முறை இனக்குழு அமைப்பை அடிப்படையாகக் கொண்டு வந்திருக்கலாம். குழுவின் தலைவனை மையமாகக் கொண்டு மற்றவை உருவாக்கப்பட்டிருக்கலாம்.

சில கல்லறைகளில் இரண்டு இடுதுளைகள் உள்ளன. கல்லறை, கல்லறையின் முன் உள்ள சுற்றுப்பலகைக் கல் ஆகியவற்றில் உள்ளன. இரண்டு கல்லறைகளைக் கொண்ட சின்னத்தில் இரண்டு கல்லறைகளை இணைக்கும் அமைப்பில் இடுதுளைகள் காணப்படுகின்றன. எனவே இடுதுளை வழியாக கல்லறையின் எல்லா பகுதிகளையும் இணைக்கும் அமைப்பில் இடுதுளைகள் காணப்படுகின்றன. எனவே இடுதுளையின் வழியாக இறந்தவர்களின் ஆன்மா கல்லறையில் தங்குகின்றது என்பதும் கல்லறையின் அனைத்துப் பகுதிகளிலும் செல்கின்றன என்பதும் தெளிவாகின்றன. இதில் வரையப்பட்டுள்ள ஓவியங்களும் இதற்கு வலுசேர்க்கின்றன.[4]

## கல்வட்டங்கள்

கல்வட்ட வகையைச் சார்ந்த நினைவுச் சின்னங்களும் இங்கு காணப்படுகின்றன. இவை தரையிலிருந்து சுமார் ஒரு மீட்டர் உயரத்தில் மண்மேடாகக் காட்சியளிக்கின்றன. இதில் கல்லறைகள் தரையின் கீழ் மட்டத்தில் அமைக்கப்பட்டு மேலே சிறிய கற்களைக் கொண்டு வந்து குவித்துள்ளனர். இதனுடன் செவ்வக வடிவ கற்பலகைகளை வட்டவடிவில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன. பெரும்பாலான கல்வட்டங்கள் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. பெருங்கற்கால சின்னங்களின் அருகில் ஊரிருக்கை (Habitation) இருந்ததற்கான தடயங்களை காண இயலவில்லை. இப்பகுதி முழுவதும் அடர்ந்த காடாக இருப்பதால் இதைத் தேட இயலவில்லை.

## பாறை ஓவியங்கள்

வரமணகுண்டாவில் இரண்டு இடங்களில் தொல்பழங்கால ஓவியங்கள் காணப்படுகின்றன. 1. கல் திட்டையிலுள்ள ஓவியங்கள், 2. குகையை ஒத்த பாறையில் உள்ள ஓவியங்கள்.

கல்திட்டையிலுள்ள ஓவியங்கள் கல்லறையின் தெற்கு, வடக்கு பகுதியிலுள்ள கற்பலகைகளில் தீட்டப்பட்டுள்ளன. இவை வெள்ளை வண்ணத்தில் காணப்படுகின்றன. மனித உருவங்கள், மிருகங்களின் மேல் அமர்ந்துள்ள

உருவங்கள், நான்கு மனித உருவங்கள் தொடர்ந்து நிற்கின்ற காட்சிகள் போன்றவை உள்ளன. ஒரு கல்திட்டையில் ஓர் உருவத்தைச் சுற்றிலும் மூன்று உருவங்கள் உள்ள காட்சியும் இடம் பெற்றுள்ளது.

குகையை ஒத்த பாறையின் விதானத்தில் உள்ள ஓவியங்கள் கல்திட்டையிலுள்ள ஓவியங்களில் இருந்து வேறுபட்டுக் காணப்படுகின்றது. சூரியன், சந்திரன் போன்ற உருவங்களும் பல கட்டடங்களும் அவற்றைச் சுற்றிலும நீண்ட வட்டங்களும், வட்டங்களுக்குட்பட்டப் பகுதியில் சிறிய கோடுகளும் காணப்படுகின்றன. இங்குள்ள ஓவியங்கள் தடித்த நிலையிலும், அகலமாகவும் தீட்டப்பட்டுள்ளன. வட்டம் மற்றும் நீண்ட வட்டங்களைச் சுற்றிலும் புள்ளிகள் காணப்படுகின்றன.

***அடிக்குறிப்புகள்***

1. K.P. Rao, "Deccan Megaliths", Sandeep Prakashan, Delhi, 1988, p.123.
2. M. Taylor. "Megaliths tooms and other Ancient Remains in Deccan" 1941, p.15.
3. முனைவர் தி. சுப்பிரமணியன், "தமிழகத் தொல்லியலும் வரலாறும், தகடூர்ப்பகுதி" நியுசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, 2009, ப.117-120.
4. I.G. Fraber, "The Golden Bough" என்ற புத்தகத்தில் 100க்கும் மேற்பட்ட கதைகளை எடுத்தியம்பியுள்ளார்.



4

# கரிகிரி கோட்டை

**து. துளசிராமன்**
காப்பாட்சியர், பூண்டி

கரிகிரி என்னும் ஊர் வேலூரிலிருந்து 20 கி.மீ. தூரத்தில் வள்ளிமலைக்கு செல்லும் சாலையில் உள்ளது. இங்குள்ள மலைமீது கரிகிருஷ்ண பெருமாள் கோயில் இருப்பதால் இவ்வூர் கரிகிரி என அழைக்கப்படுகிறது. (கரி -கரி கிருஷ்ண பெருமாள்: கிரி - மலை)

மலையடிவாரத்தில் கரிகிரி ஊருக்கு தென்கிழக்குபுறத்தில் ஆர்க்காடு நவாபுகள் காலத்தில் தரையிலேயே கோட்டை ஒன்று எழுப்பப்பட்டது. இக்கோட்டையின் மதில்கள் சதுரவடிவில் கட்டப்பட்டுள்ளது. இதன் நான்கு மூலைகளிலும் முனைப்பான முகப்புடைய வட்ட வடிவ மேடைகள் (Bastions) அமைக்கப்பட்டுள்ளன. கோட்டையின் நுழைவாயில் கிழக்கு பகுதியில் உள்ளது. இதன் மதில் சுவர் சுமார் 20 அடி உயரத்திற்கு கருங்கற்களால் கட்டப்பட்டுள்ளது. இதன் அகலம் சுமார் 4 அடி ஆகும். இம்மதில் சுவரின் உட்புறம் கருங்கற்களை இணைப்பதற்கு களிமண்ணும் மேற்புறம் சுதையும் (Binding Material) உபயோகப்படுத்தப்பட்டுள்ளன.

கோட்டையின் கிழக்குப்புறம் காணப்படும் நுழைவாயில் இசுலாமிய கலைப்பாணியில் அரைவட்ட வளைவான (Arch) மேற்பகுதியை கொண்டுள்ளது. இருபத்தைந்து அடி உயரமுள்ள இந்த நுழைவாயில் செங்கல்லும் சுதையும் கொண்டு மிக அழகான மலர் அலங்காரங்களாக வடிக்கப்பட்டுள்ளது.

கோட்டைக்குள் ஒரு மசூதியும் ஒரு மக்பாராவும் உள்ளன. செங்கல்லும், சுதையும் கொண்டு கட்டப்பட்டுள்ள மசூதி கிழக்கு நோக்கி உள்ளது. இதன் வழிபாட்டு மண்டபம் இரண்டு பெரிய சதுர வடிவ தூண்களைக் கொண்டுள்ளது. மேற்புற சுவரின் நடுவில் "மிகரப்" எனப்படும்வழிபாடு நடத்தும் குரு அமர்வதற்கான மாடம் அமைக்கப்பட்டுள்ளது.

மசூதியின் முன்பு இரண்டு கல்லறைகள் உள்ளன. இதில் பெரியதாக காணப்படும் கல்லறை, இந்த மசூதியில் வாழ்ந்து இறைமார்க்கப்பணியாற்றிய ஞானி ஒருவரின் கல்லறையாகும். இவர் பெயராலேயே இம்மசூதி தற்போது "பேலம் ஷா அவுலியா மசூதி" என வழங்கப்படுகிறது.

மசூதிக்கு பக்கத்தில் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் ஆர்க்காடு நவாப்புகள் காலத்தில் கரிகிரியை ஆட்சிபுரிந்த கில்லேதார் ரசுத்கான் என்பவரின் கல்லறை (மக்பாரா) ஒன்று உள்ளது. இதன் கவிகை மாடம் (Dome) ஒன்பது பட்டைகள் கொண்ட வட்டமான அமைப்பில் செங்கற்களால் கட்டப்பட்டு சுதையில் பலவிதமான அலங்காரங்கள் செய்யப்பட்டுள்ளன. உடல் கீழ் பகுதியில் புதைக்கப்பட்டு (கபர்) அதன் மீது ஒரு மேடை கட்டப்பட்டு, அதில் கல்லறை (ஜரிஹா) எழுப்பப்பட்டுள்ளது.

இக்கோட்டையின் மேற்குபுறத்தில் இரண்டடுக்கு மாடி அரண்மனை ஒன்று சிதைந்த நிலையில் உள்ளது. அரண்மனையின் பிற பகுதிகள் இருந்து அழிந்து போவதற்கான அடிச்சுவடுகள் அதிக அளவில் காணப்படுகின்றன. இக்கோட்டைக்குள் இரண்டு பெரிய ஆழமான கிணறுகளும் கோட்டை மதில் சுவருக்கு வெளியே வடகிழக்கு பகுதியில் ஒரு நீச்சல் குளமும் அதனைச் சுற்றி பெண்கள் உடை மாற்றிக் கொள்வதற்கான அலங்காரம் செய்யப்பட்ட நான்கு அறைகளும் உள்ளன.

கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் ஆர்க்காடு நவாபுகள் காலத்தில் கர்நாடகத்தில் 84 கோட்டைகள் இருந்தன. இக்கோட்டைகள் அந்தந்த பகுதியை நிர்வகிக்கும் ஆட்சி அலுவலகங்களாக மட்டுமன்றி நவாபின் படைகள் தங்கும் பாசறை களாகவும் விளங்கின. அத்தகைய கோட்டைகளில் கரிகிரியும் ஒன்றாகும்.



# 5

# சேதுபதி செப்பேடு

**சொ. சந்திரவாணன்**
உதவி இயக்குநர்(பொ).
தொல்லியல் துறை, மதுரை

முதுகுளத்தூர் செல்லியம்மன் கோயில் பூசகராகப் பணிபுரியும் திரு. வெங்கடேஸ் என்பவரின் குடும்பத்தாருக்குப் பாத்தியப்பட்ட செப்பேடு ஒன்று வாசிப்பதற்காகப் பெறப்பட்டது. புதிதாகக் கண்டறியப்பட்ட அச்செப்பேட்டின் விவரம் வருமாறு :

## செப்பேட்டின் விபரம்

இச்செப்பேடு 35 செ.மீ. நீளமும் 13.5 செ.மீ. அகலமும் கொண்டது. அகலவாக்கில் எழுதப்பட்டுள்ள இச்செப்பேட்டின் முன்புறம் இடதுபக்கம் 10 செ.மீ. அளவிற்கு இறை உருவங்கள் கோட்டுருவச் சிற்பங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. மீதமுள்ள 25 செ.மீ. பகுதியில் அகல வாக்கில் 28 வரிகளும், பின்புறம் 28 வரிகளுமாக மொத்தம் 56 வரிகள் துகாணப்படுகின்றன.

## செப்பேட்டின் காலம்

கி.பி.1714-ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட தானச் செய்தியினைப் பற்றித் தெரிவிக்கின்றது. செப்பேட்டின் மன்னன் இராமநாதபுரம் சேதுபதி வரிசையில் வருகின்ற "விஜயரகுநாத சேதுபதி" ஆவார்.

## செப்பேட்டின் மொழிநிலை

பேச்சு மொழியில் எழுதப்பட்டுள்ள இச்செப்பேட்டுள் வடமொழி எழுத்துகள் சில காணப்படுகின்றன. புராணச் செய்திகள் இடம்பெறும் முதற்பகுதியில் "எதுகை மோனை" போன்ற தொடர்களைக் காணமுடிகின்றது. எண்ணிக்கை அடிப்படையில் கூறப்படும் சில தொடர்கள் விளக்கம் பெறுகின்றன. எடுத்துக்காட்டாக சப்த சாகரம், அஷ்டதிக்கு, அஷ்டகிரி, அஷ்டகேசமானம், நவகிரகம் என்பன இதுபோல முப்பிரி நூலைக் குறிக்கும் எக்கினோபவீதம்" என்ற தொடரும் நினைக்கற்பாலது.

மேலும் தமிழில் எண்களின் தொடர்களும் காணப்படுகின்றன. "பதினாலு லோகம்", "இருநூத்தி இருபத்து நாலு புவனம்", ஆயிரத்தெட்டு அண்டம்" என்பன

காட்டாகும். தமிழ்மொழியில் 'ஈ' என்னும் உயிர் எழுத்தை எழுத 'இ' எழுத்தின் மேலாக ஒரு சுழி அமைத்து (இ) நெடிலாகக் குறிக்கப்படுகின்றது. இவ்வழக்கம் ஓலைச் சுவடியில் காணப்படுவது இங்கு கையாளப்பட்டுள்ளது. இதே போன்று 'உம்' மைத் தொகையினை எழுத கூட்டெழுத்தாக எழுதும் (யூ) ஓலைச்சுவடி முறை இங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக. 'காராம் பசுவை யூ, சேதுவை யூ' என்பவற்றைக் கூறலாம். குறில் நெடில் பாகுபாடு இன்றி எழுதப்பட்டுள்ள இச்செப்பேட்டு வரிகளைப் படிக்கும் போதுதான் இவற்றை உணர்ந்துகொள்ள முடிகின்றது. உதாரணமாக 'கய்ப்புத்திரன்', 'யிருதையம்', 'வெகுசாரி', 'யிடைகூறு', 'பஞ்ச தொளிலாலி', 'காளாஞ்சி', 'சிற்ப விசுவகன்மா' என்பன.

## செப்பேட்டின் செய்திச் சுருக்கம்

இராமநாதபுரம் சேதுபதி வரிசையில் விஜயரெகுநாத சேதுபதி அவர்கள், இராமேசுவரம் ராமலிங்க சுவாமி, பர்வத வர்த்தினி அம்மன் கோயிலில் திருப்பணி நடைபெற்றபோது, அம்மன் சன்னதி வாசல், சித்திரகோபுரம், கலியான மண்டபம் திருப்பணி முடித்து அனுப்பு மண்டபம் திருப்பணி நடந்தபோது அனைவரும் அக்கோயிலில் சபை கூடியிருந்தனர். அப்போது நாராயணப்புலவன் மகன் ஆதித்தனாலங்கராயன் என்பவனின் கைப்புத்திரனான முதுகுளத்தூரில் வசிக்கும் குமாரப்புலவன் மகன் அச்சபையில் 'வெகுசாரி' ஆட்டம் ஆடினான். அவனின் ஆட்டம் கண்டு அனைவரும் மகிழ்ந்தனர். அதனால் அவனுக்கு 'விசைய ரெகுநாத அனுமக் கொடினாலங்கராயன்' எனும் சிறப்புப் பெயருடன் செப்பேடு கொடுக்கப்பட்டது. மேலும், அவனுக்கு கலியாணம் செய்யும் மாப்பிள்ளை மற்றும் பெண் வீட்டார்கள் ஒவ்வொரு பணமும், தின்மைகள் நடக்கும் போது ஒரு பணமும், குடும்புக்கு ஒரு பணமுமாக கொடுக்கவும் ஏற்பாடாகிறது. அதோடு பள்ளு ஒன்றுக்கு ஒரு குறுணியும் பெற்றுக்கொள்ள கட்டளை இடப்பட்ட செய்தியினைத் தெரிவிக்கிறது. இறுதியில் ஓம்படைக் கிளவி கூறப்படுகின்றது.

## கோட்டுருவச் சிற்பம்

இச்செப்பேட்டில் காணப்படும் மூன்று கோட்டுருவச் சிற்பத் தொகுதியில் அம்மன் உருவம் நடுவிலும் இடப்புறம் விநாயகர், வலப்புறம் அனுமன் உருவமும் செதுக்கப்பட்டுள்ளது.

### விநாயகர்

பத்ர பீடத்தில் சுகாசனமிட்டு அமர்ந்துள்ள விநாயகர், இடையாடை, உதரபந்தம் கட்டி நான்கு திருக்கரங்களுடன் காணப்படுகின்றார். மேலிருகரங்களில் வலக்கரம் மலர் ஏந்தியும் இடக்கரம் அங்குசம் தாங்க கீழிருகரங்களில் வலக்கரம் அபயமாகவும், இடக்கரத்தில் உள்ள மோதகத்தை தும்பிக்கை எடுப்பது போலவும் காட்டப்பட்டுள்ளது.

### அம்மன்

நடுவில் உள்ள அம்மன் உருவம் பத்ர பீடத்தின் மீது வலக்கால் மடித்து இடக்கால் தொங்கவிட்ட நிலையில் சுகாசனமாய் அமர்ந்துள்ளார். தொங்கவிட்ட இடக்காலின் கீழாக மூன்று மனிதத்தலைகள் காட்டப்பட்டுள்ளன. இடையாடை கணுக்கால் வரை காணப்படுகின்றது. மார்பில் கச்சு இல்லை. நான்கு திருக்கரத்தில். மேலிரு கரங்களில் வலக்கரம் உடுக்கை, இடக்கரம் பாம்பு ஏந்தியும் காட்டப்பட்டுள்ளது. கீழிருகரங்களில் வலக்கரத்தில் சிறிய சூலமும், இடக்கரத்தில் கபாலம் ஏந்தியுமுள்ளது. ஜுவாலாமகுடம், உருட்டிய விழிகள், கரத்தில் குண்டலம், கோரைப்பற்களுடன் தோளில் போடப்பட்ட உருமாலை பறந்தநிலையிலும் காட்டப்பட்டுள்ளாள் அம்மன். இவள் செல்லியம்மன் என்ற பெயரில் வணங்கப்பட்டு வருகின்றாள்.

### அனுமன்

பத்ர பீடத்தில் வலக்கால் முன்வைத்து இடக்கால் பின் வைத்து நடக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளார். இடையாடை கணுக்கால் வரை உள்ளது. நடக்கும் கால்களுக்கிடையே ஆடையின் 'விசிறி மடிப்பு' காட்டப்பட்டுள்ளது. அனுமனின் வால் மேல் நோக்கிச் சென்று தலைக்கு மேலாக வளைந்து காணப்படுகின்றது. இரண்டு திருக்கரங்களில் வலதுகரம் 'தை' ஏந்த இடக்கரம் 'தாடக' முத்திரை (அறைவதுபோல) காட்டியுள்ளார்.

இம்மூன்று கோட்டுருவங்களின் பீடத்தின் கீழாக சுத்தி, கொல்லர் பயன்படுத்தும் அடிப்பீடம், உளி, பரசு, துலாக்கோல், எழுத்தாணி, சம்மட்டி, ஏர்முனை, கொளு, கன்னக்கோல் என்ற வரைகோட்டு உருவங்களும் வரிசைப்படி காட்டப்பட்டுள்ளது.

### <u>சொற்பொருள் விளக்கம் :</u>

காளாஞ்சி : வெற்றிலைப் பாக்குடன் கூடிய பிரசாதம்

வெகுசாரி(ஆட்டம்) : வேடம்கட்டி ஆடும் ஆட்டம்(உருமாறி ஆடுதல்)

நாலங்கராயன் : நாலு + அங்கம் + ராயன்

## பக்கம் 1

1. சுவத்திறி சாலிய வாகன சகாத்த(ம்) ௲௱௯௰ இதின் மேல் செல்லா நின்ற செயவரு ை
2. வய்காசி மீ யிரு ௨ வியாளக்கிளமையும் பூர்வ பட்சத்தில் திசமியும் அற்த்த நட்ச்செ
3. த்திரமும் சித்தா நாம யோகமும் சிரசவா கிரணமும் கூடின ஹுன்னிய காலத்தில்
4. பார்பரமாகிய பரமேசுரரை குராதலம் படைக்க தானினைந்தருளி பராபரத்தில் பர
5. ந்தோன்றி பரத்தில் சிவந்தோன்றி சிவத்தில் சத்திதோன்றி சத்தியில் நாதந்தோ
6. ன்றி நாதத்தில் விந்து தோன்றி விந்துவில் சதாசிவந் தோன்றி சதாசிவ
7. த்தில் மயேசுரன் தோன்றி மயேசுரத்தில் ருத்திரன் தோன்றி ருத்திரனில்
8. விஷ்ட்னுத் தோன்றி விஷ்ட்னுவில் பிரமாத்தோன்றி ருத்திரனும்
9. பிரமாவும் விஷ்ட்னுவும் திஷ்டதி சங்காரம் மூன்றும் நேமித்திருக்கிறபோது
10. ருத்திரர் நீங்கலாக பிரமா முதலாகிய சகலமும் விஷ்ட்னு உதரத்துளடக்
11. கி திருப்பாக்கடலில் ஒருகந் தீண்டபோது ருத்திரர் வந்து விஷ்ட்னு துயிலை
12. நீக்கி சகல புவனங்களும் அண்ட மடுக்கு தட்டு தாபரமும் படைக்க வேண்
13. டி ஆகலாசினையாய் நெத்தியில் கண்ணை நெருப்பாக்கும்போது தந்தை ை
14. வ போல தானுதித்தருளி அய்ந்து முகமும் மூனவந்து கண்ணும் பத்து குவ
15. ளையும் பத்து கரமும் சிகர எக்கினோப வீதமும் கவச குண்டலமும் இவ்வடிவ
16. ங்க(ள்) எழுந்தருளி வாயுவை பூரித்து அப்புவை நிறுத்தி அப்புமீதில் கூர்மத்தி
17. ல் மேல் அஷ்ட்ட கேச மாணாகம் நிறுத்தி அதில் மேல் பூமியை நிறுத்திஅந்த
18. ர சொ(ர்)க்க பாதாள அதள விதள சுதல நிதல தார்தலம் காதல பாதாளலோ
19. கமும் பூலோக புவலோக சுரலோக மகாலோக சினலோக கபலோக சத்தி
20. யலோகம் மென்னபடா நின்ற பதினாலுலோகமும் ஆயிரத் தெட்டு அடாண்ட
21. மும் இருநூத்து இருபத்துனாலு புவனமும் தட்டு தாபரமும் நிறுத்தி மக மேரு
22. வே அஞ்சுரு பாணியாகவும் அஷ்டதிக்கிலும் இமைய கிரி மந்திர கிரி க
23. யிலாச கிரி நிறத்த கிரி நீலகிரி இமைய கிரி கந்த மாதன கிரி என்கிற அ
24. ஷ்ட கிரியும் இந்திரன் அக்கினி இயன் நிறுதிதி வாயுகுபேரன் இ சானன் எ

25. ன்கிற திக்கு பாலகரையும் நிறுமித்து உவர்க் கடல் பாக்கடல் தயிர்க்
26. டல் நெய்க் கடல் தேன்கடல் மதுக்கடல் நல்ல தண்ணீர் கடல் என்
27. கிற சத்த காரமும் நவக்கிரகராசி நட்செத்திர சோம சூரிய அத்தி
28. னியும் நியமித்து மனுமயன் தொட்டா சிற்ப விசுவகன்மாவாகிய
29. அஞ்சுதிரு உருக் கொண்டு சமைத்ததையும் தன் யிறதயத்து நடத்தும் ஆதிவிசு
30. வ கர்ம்மா ஓங்கார சுருபியள் பஞ்சு தொளிலாலும் பலன்பெற வகுத்தோர் அனுமத்துவாசா
31. அக்கசாலைத் தலைவர் அகத்தியனை பொதிய மாமலையில் அமைத்தோர் காராளருக்குயா
32. க்கல் பந்தலிட்டோர் பாண்டியன் மகுடம் பாவல(ர்)க் களித்தோர் சோளன் கய்யில் காளாஞ்
33. சி யேந்த பெத்ததோர் வல்லி அந்தராம ராபன் மாந்தை நகராதிபன் துடந்த நாடகம் கொண்டு
34. வாயுள்ளானை வெண்றோமாலிமை சாத்திரம் கண்டு வார்குலம் வகுத்தோர் சூரியனை அச்சி
35. ல் லோட்டி கடைந்தோர் வாரியனைக் கண்ட்டோர் தெய்வ நட்டுவராயன் வெங்கலத்துக்கு சுங்க
36. ம் தவிள்க்க வேண்டி தாணியன் முடியை தானரித்திட்டோர் மகாமேருவே மத்தாகவும் வாசு
37. கியே கயறாக பூமி தாலியாக சுத்த சமுத்திரத்ததை அமுதம் கடை வித்தோர் கனகராம மென்
38. று தான் அறிவாளருக்கு தாலியென்று சமைத்து குடுத்தோர் பிரமாவுக்கு எழுத்தாணியும் சத்தி
39. ரியருக்கு வாளு(ம்) வணியருக்கு திராசுபடி ஆணிக் கோர்வை துலாக் கோலு குடுத்தோர் கன்ன
40. க் கோலும் களுவும் குடுத்தோர் சூத்திரருக்கு கொளு முனையும் கதிர்முனையும் குடுத்தோர் திறிமது
41. இரணிய கெர்ப யாசியான விசைய ரெகு னாதச் சேதுபதி காத்த தேவரவர்கள் பருவத வர்த்
42. தனி அம்மன் சன்னதி வாசு திறந்து சித்திரக் கோபுரமும் கலியான மண்டபமும் முகித்து அனுப்

43. ப மண்டபம் வேலை செய்யிற நாளையிலே ராமலிங்க சுவாமி பறுவத வற்த்தினி அம்மன் சன்னதி

44. யிலே தெக்கு வடக்கு கிளக்கு மேக்கு யிப்படி னாலா தேசத்தில் உறமுறை அஞ்சாதி ஏளுபத்துனா

45. லு ஆகணத்தாரும் நிரவற நிறந்து குரவரக் கூடியிருக்கிற போது நாறாயனப் புலவர் மகன் ஆதித்

46. தனாலங்கராயன் அவர்கைப் புத்திரன் முதுகுளத்தூரில் இருக்கும் குமாரப் புலவன் மகன் வந்து அம்மன் சன்

47. னதியிலே வெகுசாரி ஆடினான் அதுகண்டு சந்தோஷமாய் அஞ்சு சாதி யெளு பத்து நாலு ஆகண

48. த்தாரும் அவனுக்கு விசையரகுனாத அனும கொடினாலங்கராய(ன்) யெண்டு பேருங் கொடுத்துப்பட்டை

49. யமுங் கொடுத்துக் கலியாணத்துக்கு மாப்பிள்ளை வீட்டுக் கொரு பணமும் பெண் வீட்டுக் கொ

50. ரு பணமும் திண்மைக் கொரு பணமும் வருஷத்திலே குடிக்கொரு பணமுங் குடும்புக் கொரு பண

51. ம் பள்ளுக்கு க குறுணியும் யிந்தப்படிக்குடுக்க சொல்லிக் கட்டளையிட்டோம் ராமனாத சுவாமி பறுபத

52. வற்த்தனியம்மன் சன்னதியிலே பட்டையமும் கொடுத்தோம் யிந்தப் பட்டையத்துக்கு ஆதா மொருத்த

53. ன் இதுக்கு யிடை கூறு பண்ணின வன் சேதுவிலே *யு* கெங்கைக்கரையிலே காராம் பசுவை *யு* மாதா

54. பிதாவையும் குருவையும் வதைச் செய்த தோஷத்திலே போது வாராகவும் இந்தப்படிக்கு கச்சி காமாச்சியம்ம

55. ன் துணை ஆனந்தனாத நாலங்கராயன் புத்திரன் பெரிய நயினாலாங்கராயன்னாத(ன்) எழுத்து பறுவதவத்தியம்ம

56. ன் துணை உ



6

# Octagonal shaped 50 Dollars gold coin of 1852

**N. Sundararajan**
**Curator**
**Government Museum**

Government Museum Chennai acquired one rare octagonal shaped gold coin from Government Museum, Pudukkottai. This coin has an image of an eagle and legend on the obverse side, while the reverse is machined. This type of reverse is called target reverse. Edge of the coin is having reeded edge on all eight sides. Weight of this coin is 84.63 grams; diameter is 4 centimeters.

***Obverse:***

The obverse features a stylised eagle and shield. Above the eagle is a ribbon with the fineness of 887 THOUS. The country's name is with in a circle with the denomination FIFTY DOLLS at the bottom. Outside the circle, it reads AUGUSTUS HUMBERT UNITED STATES ASSAYER OF GOLD CALIFORNIA 1852.

***Reverse:***

The reverse side of this coin remains blank, without any legend or images. Machine ground designs are seen. This type of reverse is known as machined reverse, and also called as "target reverse".

***History of Octagonal shaped 50 Dollars coin***

This coin contains was minted Augustus Humbert at the United States Assay Office in San Francisco, known as "Territorial" pieces. They were issued by private minting concerns during the Gold Rush. San Francisco mint was opened in the year 1854. These "Territorial" coins were demonitised by the American authorities afterwards.

This coin weighing almost 2½Troy ounces of gold was minted by Augustus Humbert at the United States Assay Office in San Francisco California and thesearecalled"Territorial" pieces because they were issued

by private minting concerns during the California Gold Rush. The San Francisco Mint Opened in 1854 and these "territorial" coins were no longer permitted by the American authorities. The $50 coins were the largest denomination issued. This example shows, that these coins (or "slugs" as these $50 coins were called) circulated extensively. THe obverse features a stylised eagle and shield, Ribbon with legend 'LIBERTY', the fineness of 887 THOUS and above it the eagle is portrayed. The country's name is within a circle with the denomination FIFTY DOLLS embossed at the bottam. Outside the circle, it reads "AUGUSTUS HUMBERT UNITED STATES ASSAYER OF GOLD CALIFORNIA 1852". The reverse has a machined reverse and that is called a "target reverse". The unique $50 octagonal shape soon became a symbol of California coinage.

***Fineness of this coin***

"Humbert ingots continued to be struck in 1852 under the authority of both the United States Assay Office and its successor, the United States Assay Office of Gold. Variations in the ingots over that two year period are found in the edges (lettered and reeded), reverse designs and/or fineness of the gold content. Because they were technically ingots and not coins, they were not required to be of the same 90% purity as federal gold coins. Consequently, the Humbert ingots can be found in finesses of.880, .884, .887 and .900. Some varieties required as many as 14 steps to produce a single coin. Early in 1852 Moffat & Co. was dissolved and John L. Moffat severed all connections with his former partners. They continued in the business under the name of Curtis, Perry & Ward. The Treasury Department, as authorized by the 31st Congress on September 30, 1850, transferred the Contract for Smelting and Assaying Gold in California, to the new partnership. Augustus Humbert stayed on as U.S. Assayer with the organization now called The United States Assay Office of Gold . In spite of the slight change in title the firm continued to work as a provisional mint operating under emergency conditions. While the designs adopted for the issues included an undeniably American Eagle, the coins deliberately avoided any close resemblance to those of the regular U.S. mints. Nevertheless the fact that they carried the legend UNITED STATES OF AMERICA gave them an official status and guaranteed their weight and fineness".

"The somewhat irregular nature of the U.S.A.O.G. was not only a reflection of the crisis conditions then prevailing in the California gold fields, but a deliberate, and necessary, attempt to evade the Mint Act of January 18, 1837. The Act provided that U.S. Gold coins be .900 fine

with no more than 50 parts of silver in an otherwise pure copper alloy. It was virtually impossible to conform to this regulation. Copper was in short supply in California and the parting acids required in the refining process could not be shipped safely either by land or sea. Nevertheless the coinage of the USAOG was accepted in payment of obligations to the federal government thanks to the realistic attitude of the U.S. Collector of Customs, T.Butler King, who managed in spite of conflicting instructions from Washington".

"The efforts of the Assay Office of Gold to conform to the law, meet the necessities of the time, and yet operate at a profit were varied and complex. For a long time, the details were not easy to penetrate in depth. In recent years they have, however, begun to become less obscure. In the last decade positive evidence was provided by a hoard of regular coins, patterns, trial pieces and ingots. In addition, research in the National Archives has greatly enlarged our knowledge of the firms operations and the means taken to solve some of the many problems facing it. This information is of great interest to collectors with whom the USAOG coinage has long been popular".

"Congress finally passed the Act On July 3, 1852 authorizing the establishment of a United States Branch Mint in San Francisco. Curtis was able to buy the contract for the new mint and the following year the U.S.A.O.G. was transferred to the federal government for $285,000. This sum included $425,000, for an expansion of the original premises under Curtis supervision. Meanwhile Perry undertook to acquire $50,000,00 worth of machinery. The old provisional mint was finally able to go into operation as the U.S. Branch Mint, San Francisco, on April 3, 1854".

***Design and Specialty of this coin***

The Humbert coins are a unique example of territorial coinage and represent what many would consider the most fascinating period in the history of California. In addition to their place in history, the subtle details of the Humbert coins also add to their desirability.

- There hadn't been a need for such a large gold coin. Prior to the staggering gold discoveries in California, along with the highly inflated Western economy.
- Charles Cushing Wright, probably the most skillful medal engraver of the era, artfully rendered the design of an eagle perched on a rock with a scroll in its beak, clutching a shield, a group of arrows and an olive branch.

- A handsome engine-turned spiral decorates the reverse (with either a target in the center or the number "50"), a design that connects the coins in a very personal and unique way to Augustus Humbert, who was a watchmaker in New York City prior to his position as assayer.
- The mass melting of early gold rush era coinage, a function of new U.S. government issued coins being struck at the new San Francisco Mint, contributed to making the Humbert ingots rare. According to *The 100 Greatest U.S. Coins,* "although thousands of United States double eagles were found in the wreckage of the steamer **SS Central America**, very few fifty-dollar 'slugs' were discovered(13), most of which were Augustus Humbert issues".

***Conclusion***

Numismatists praise this coin series as one among the 100 greatest U.S. coins. Government Museum, Chennai is having one such rare coin in its collection.



# 7

# அஞ்சினான் புகலிடம்

**ச. செல்வராஜ்,** தொல்லியல் அலுவலர்
**கோ. அர்ச்சுனன்,** காப்பாட்சியர்
தொல்லியல் துறை, தஞ்சாவூர்

தமிழகத்தில் சமண சமயம் மிகவும் சிறப்புப் பெற்ற நிலையில் வளர்ச்சி யடைந்திருந்தது என்பதை சங்க கால இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. அவ்வாறு தமிழ்நாட்டில் வேரூன்றி வளர்ந்ததை ஆங்காங்கே காணப்படும் கல்வெட்டுச் செய்திகளும், தமிழகத்தில் பல இடங்களில் கிடைத்துள்ள சமண தீர்த்தங்கரர்களின் திருவுருவங்களும் சான்றாக நின்று உறுதி கூறுகின்றன.

சமண சமய வளர்ச்சிக்கு காரணம் அவர்கள் பின்பற்றி வந்த கொள்கைகளும், சாதி மதம் பாராட்டாத பண்பும், தமிழகத்தில் நிலையானதொரு இடத்தை அடையக்காரணமாக திகழ்ந்தது. சமணர்கள் தங்கள் வாழ்வில் நான்கு தானங்களை தங்கள் கண்ணாக போற்றி அதன் வழியில் தங்கள் வாழ்க்கைப் பாதையை அடைந்தனர். இந்த நான்கு தானமும் சமணர்களுக்கு மட்டுமே உரித்ததன்று பின்னால் வந்த அனைத்து மக்களுமே இதனை அடிவொற்றியே நடந்தனர் என்பதும் கல்வெட்டுச் சான்றுகள் மூலம் அறிய முடிகின்றன.

**நான்கு வகையான தானங்கள்**

1. அன்னதானம் 2. அபயதானம்
3. ஔடத தானம் 3. சாத்திர தானம்

**அன்னதானம்**

உணவு கிடைக்காத ஏழை மக்களுக்கு உணவு கொடுப்பதும், பசிப் பிணியை போக்குவதும் தலைசிறந்த அறம் அல்லவோ! அத்தகைய அறச்செயலை பல சமயத்தினரும் பின்னர் பின்பற்றி வாழ்ந்துள்ளனர். உணவுக் கூடங்கள் ஆங்காங்கே அமைத்து வழிப்போக்கர்களுக்கும் வணிகர்களுக்கும், உணவு கிடைக்காத இடங்களில் உணவு அளித்து இளைப்பாறச் செய்தது, உணவே கிடைக்காத ஏழைகளுக்கு அன்னசத்திரம் அமைத்து உணவு அளித்தல் என பல்லாற்றானும் பெறுகிறது. வள்ளலார் அணையா விளக்கை ஏற்றி பசி என்று வந்தோர் தன் பசிப்பிணியை போக்கச் செய்து மக்கள் மனதில் நிலைத்தார். வடலூரில் இன்றும்

பல அறச்சாலைகள் இருப்பதைக் காணலாம். சமண காப்பியமாகிய மணிமேகலையில் குறிப்பிடும் அட்சைய பாத்திர படைப்பு அன்னதானத்தை குறிக்கவே அமைத்த ஒன்று.

**அபயதானம்**

அச்சங்கொண்டு தன்னை நாடி புகலிடம் கேட்பவர்க்கு அடைக்கலம் கொடுத்து காப்பதுதான் அடைக்கலதானம், அபயதானம், உயிரையும், உடமையையும், காப்பதுவே ஆகும். இவ்வாறு காக்கும்பொழுது இவர்கள் இருக்க இடம், உணவு மற்றும் பிற வசதிகளை ஏற்படுத்தி தனது நாட்டில் ஓர் இடத்தை ஒதுக்கி வந்துள்ளனர். அந்த இடத்திற்கு அஞ்சினான் புகலிடம் என்று கல் நாட்டி அனைவரும் அறியும் வண்ணம் அமைத்து புகலிடம் தந்து வந்தவர்களுக்கு பாதுகாப்பு அளித்துள்ளனர். இதனை சமணத்துறவிகள் பொன்போல் போற்றி அபயமளித்துள்ளதை காணமுடிகின்றது. இந்த அஞ்சினான் புகலிடத்தைப் பற்றிய செய்திகளை பின்னர் விரிவாக காண்போம்.

**ஔடத தானம்**

சமணர்களும், பௌத்தர்களும் பொதுமக்களுக்கு நன்மை பயக்கும் பயனுள்ள காரியங்கள் பலவற்றை செய்த பெருமையை நாம் நமக்கு கிடைத்துள்ள சான்றுகள் தெளிவுபடுத்துகிறது. அவ்வாறு சமணப் பெரியவர்கள் மருத்துவம் பயின்று நோயாளிகளுக்கு மருந்து கொடுத்து நோயைத் தீர்த்து வைத்துள்ளனர். தாங்கள் தங்கியுள்ள மடங்களிலும் பிற இடங்களிலும் இலவசமாக மருந்து கொடுத்து மக்களின் நோயைத் தீர்த்து வந்தமையால் மக்கள் சமண சமயத்தையும் அம்மதத்தின் ஆக்கத்திற்கும் பேருதவியாக அமைந்தனர். சமணத் துறவிகள் மருந்து அளித்து மக்களின் நோய் நீக்கிய செய்தியை அவர்கள் இயற்றிய நூல்கள் சிலவற்றில் குறிப்பாக ஏலாதி, திரிகடுகம், சிறுபஞ்சமூலம் என்ற நூல்களால் உணரப்படுகின்றது. மேலும் மருந்துகளின் பெயரையே அந்நூலுக்கு தலைப்பாக அமைத்தமையும் நமக்கு தெளிவாக எடுத்துரைக்கின்றது. உடல் நோயை தீர்க்க மருந்தளித்தும் உள நோயைத் தீர்க்க நூல்களை இயற்றிக் கொடுத்தும் சமணத்துறவிகள் மக்களுடன் ஈடுபாடுடன் தங்களது சமயத் தொண்டை புரிந்து வந்துள்ளனர். செல்லுமிடமெல்லாம் அப்பகுதியின் மொழியையும் கற்று அவர்களது மொழியிலேயே மக்களை அணுகியமை மேலும் அவர்களது சமய வளர்ச்சிக்கு வலுவூட்டியது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**சாத்திர தானம்**

சாத்திர தானம் என்பது கல்வியறிவை புகட்டுவது. கல்வி அறிவை அளிப்பதோடு மட்டுமல்லாமல் சமணர்கள் தங்களது வசதிக்கு ஏற்ப தங்களது இல்லங்களில் நடைபெறும் திருமண நாட்களிலும், இறந்தோருக்குச் செய்யும் இறுதிக்கடன் நாட்களிலும் பிற திருவிழாக்களிலும் தங்களது சமய நூல்களைப் பல பிரதிகள் எழுதி வைத்து அவற்றை உரியவர்களுக்கு தானம் அளித்துள்ளனர். அச்சுப் புத்தகம் இல்லாத காலத்தில் பனை ஏடுகளில் நூல்களை எழுதி வந்தார்கள். ஆகவே செல்வம் படைத்த சமணர்கள் தமது சமய நூலைப் பல பிரதிகள் எழுதி வந்து அவற்றை தானம் செய்துள்ளார்.

சமணத் துறவிகள் மற்றும் சமணப் பெரியோர் மட்டுமின்றி பௌத்த சமயத்தவரும் தாங்கள் எந்தப் பகுதிக்குச் செல்கின்றோமோ அந்த நாட்டின் தாய்மொழியிலேயே தங்களின் மத நூல்களை எழுதி வெளியிட்டனர். எனவேதான் தமிழகத்தில் சமணமும் பௌத்தமும் செழித்தோங்கியது என்பது திண்ணம். சமணத் துறவிகள் தம் பள்ளிகளிலே ஊர்ச் சிறுவர்களுக்குக் கல்வி கற்பித்தனர். இதனாலேயே பாடசாலைகளுக்குப் பள்ளிக்கூடம் எனும் பெயர் உருவாயிற்று. அதற்கு சிறப்பு பெற்றது சாத்திர தானம்.

இந்த நான்கு தானங்களில் மிகவும் சிறந்ததும் இன்றியமையாததும் என குறிப்பிடுவது அபயதானம் ஆகும். இவை மனிதன் உயிரோடு வாழும்பொழுதுதான் பசி, மருத்துவம், கல்வி என அனைத்தும் தேவைப்படுகிறது. எனவேதான் முதலில் மக்களின் உயிரையும் உடமையையும் காப்பாற்ற அபயதானத்தை வலியுறுத்தி அதிக அளவில் மேற்கொண்டுள்ளனர். அத்தகு புகலிடம் சமணர் காலத்தில் அதிக அளவில் காண முடிகின்றது. இப்பகுதியை அஞ்சினான் புகலிடம் என அறிவித்து பாதுகாத்தமை பல சான்றுகள் மூலம் அறிய முடிகின்றது.

## அஞ்சினான் புகலிடம்

புகலிடம் வந்த மக்களை காப்பது என்பது சங்க இலக்கியங்களில்கூட தெரிவிக்கும் பொழுது ஓர் நாடு மற்றொரு நாட்டோடு போர் புரியும் சமயத்தில் அறிவிப்பு ஒன்றை பறைசாற்றுவர், அந்தனர். அறவோர், பெண்டிர், உடல் நலிந்தோர், குழந்தைகள் என தங்களால் உடல் வலிமையில்லாதோரை பட்டியலிட்டு இவர்கள் போரில் கலந்துகொள்ள விலக்கு அளிப்பர். அவ்வாறு விலக்கு அளிப்பதோடு மட்டுமின்றி இவர்கள் அனைவரையும் ஓர் இடத்தில் அமர்த்தி பாதுகாப்பு வளையம் அமைத்து புகலிடம் தந்து போற்றியுள்ளமையை சங்க இலக்கிய பாடல்கள் தெரிவிக்கின்றன.

அதனடிப்படையில் சமணத் துறவிகளும் தம்மை அடைந்து அடைக்கலம் வேண்டி புகலிடம் கேட்டவர்க்கு அபயதானம் அளித்து போற்றியுள்ளமை பல இடங்களில் குறிப்பிடுவதை காணமுடிகின்றது. இதுபோன்ற இடங்களுக்கு அஞ்சினான் புகலிடம் என அறிவித்து பெயர் அளித்துள்ளமையும் அறியமுடிகின்றன. இது போன்ற அஞ்சினான் புகலிடங்கள் காணப்படும் இடங்கள் பெரும்பாலும் சமணக் கோயில்களை அடுத்தே இருந்துள்ளன. எனவே சமணர்கள் மட்டுமே இந்த இடங்களில் புகழ் அடைந்தவரைச் சமணர்கள் காத்துப் போற்றியுள்ளமை கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

தென்னாற்காடு மாவட்டம் திருக்கோயிலூர் வட்டத்தில் அமைந்துள்ள பள்ளிச் சந்தல் கிராமத்திற்கு அருகில் காணப்படும் ஜம்பை எனும் கிராமத்து வயலில் ஒரு சாசனம் இக்குறிப்பை வழங்கியுள்ளது. ஜம்பை எனும் கிராமத்திற்கு வீரராசேந்திரபுரம் என்று பெயர் உள்ள புகலிடம் இருந்ததென்பதையும் அப்புகலிடத்திற்கு வந்து அடைக்கலம் புகுந்தவரைக் காப்பாற்ற வேண்டும் என்பது கண்டராதித்தப் பெரும்பள்ளியில் எழுந்தருளியிருந்த நேமிநாதசுவாமி ஆணை என்றும் இச்சாசனம் தெரிவிக்கின்றது.

இதன் மூலம் அஞ்சினான் புகலிடம் என்ற பகுதியை நிறுவி அடைக்கலம் தேவைப்படுவோர் இங்கு சென்றால் தங்களுக்கு புகலிடம் வழங்கப்படும் என்ற கொள்கை தொடரப்பட்டுள்ளதை இவை தெளிவுபடுத்துகின்றது.

அடுத்து வந்தவாசி வட்டம் தெள்ளாறு எனும் ஊரில் அமைந்த திருமுனீஸ்வரர் கோயில் முன்மண்டபத்தில் மாறவர்மன் திரிபுவனச்சக்கரவர்த்தி விக்கிரமபாண்டிய தேவரின் 5வது ஆண்டு கல்வெட்டில் ஓர் அஞ்சினான் புகலிடம் குறிக்கப்படுகின்றது.

வாலாஜாபேட்டை கீழ் மின்னல் உள்ள ஊரில் கல்வெட்டில் சகல லோக சக்கரவர்த்தி வென்று மண் கொண்டார் எனும் சம்புவராயர் அரசருடைய 16வது ஆண்டில் வெட்டப்பட்ட ஒன்று அக்காலத்தில் இவ்வூர் அஞ்சினான் புகலிடமாக இருந்தது என்று இச்சாசனம் குறிக்கின்றது.

போளூர் வட்டத்தில் வடமகாதேவி மங்கலத்தில் புகலிடமாக இருந்தது சம்புவராயர் சகலலோக சக்கரவர்த்தி ராசு நாராயணடைய 19வது ஆண்டில் வெட்டப்பபட்ட ஒன்று. இது மகாதேவி மங்களத்தை சேர்ந்த தனி நின்று வென்றான் நல்லூர் என்னும் இடம் அஞ்சினான் புகலிடமாக இருந்துள்ளது.

இவை அனைத்தும் சமணப்பள்ளிகள் மற்றும் சமண ஆலயங்கள் இருந்த இடங்களில் காணப்படுவதால் சமணத் துறவிகள் இந்த அபய தானத்தை நடைமுறையில் பெரிதும் பின்பற்றி வந்தனர் என்றும் சமண சமயத்தோடு தொடர்புபடுத்தியும் கூறுவர். மேலும் இந்த அஞ்சினான் புகலிடம் கேட்டவர்களுக்கு புகலிடம் அளித்துள்ளமையை குறிப்பிடும் பொழுதும் அஞ்சினான் புகலிடம் என கல்வெட்டுப் பொறித்து அனைத்து சமுதாயத்தினரையும் போற்றி வந்துள்ளமையை காணமுடிகிறது.

நாகை மாவட்டம் மயிலாடுதுறை வட்டத்தில் அமைந்துள்ள நல்லாவூர் என்ற கிராமத்தில் பசுபதீஸ்வரர் கோயில் காணப்படுகிறது. இக்கோயிலில் ஓர் பலகைக் கல்லில் அஞ்சினான் புகலிடம் என்று குறித்த கல்வெட்டு வாசகம் காணப்படுகிறது. அதில் காணப்படும் செய்தியானது "திருவம்பலம் கோயில் பற்று நல்லாவூர் அஞ்சினான் புகலிடம்" என்று குறிக்கப்பட்டுள்ளது. எனவே இப்பகுதி அஞ்சினான் புகலிடம் என்று அறிவிக்கப்பட்ட பகுதியாக திகழ்ந்துள்ளது எனவே இப்பகுதி பௌத்த சமயங்கள் அதிக அளவில் வளர்ச்சி அடைந்த பகுதியாதலால் அஞ்சினான் புகலிடத்தை பௌத்த துறவிகளும் போற்றியமை இதன் மூலம் அறியமுடிகிறது. ஏனெனில் மயிலாடுதுறை வட்டத்தில் பெருஞ்சேரியில் ஓர் பௌத்த பள்ளி இருந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது ஆகும் . இப்பகுதி பூம்புகாரில் இருந்து நாகப்பட்டினம் செல்லும் வழியாக பௌத்த துறவிகள் பயன்படுத்தியுள்ளதை பல்லவனீஸ்வரம் பௌத்த விகாரத்திலிருந்து நாகப்பட்டினம் சூளாமணி விகாரம் வரை காணப்படும் பௌத்த சிற்பங்கள் சான்றாக திகழ்கிறது. எனவே பௌத்த சமயத்தவரும் அஞ்சினான் புகலிடத்தை அமைத்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**கன்னியாகுமரி மாவட்டம் : பத்மநாபபுரம் அரண்மனை அருங்காட்சியகம்**

இங்கு அமைந்துள்ள கல்வெட்டில் குறிப்பிடும் செய்தியாவது "முட்டத்தில் துறையில் குடிமக்களில் மூத்த குடிமக்களில் மூத்த கங்கன், இளைய கங்கன் உள்ளிட்டார்க்கு அடிபிடி அனியாயம் புன்கொசனம் பெறாப்பேறு மீன் பறிக்குதல் தவிர்த்தமைக்கு அஞ்சினான் புகலிடமாக குடி கிடந்து கொள்ளவும்" என்று குறிப்பு காணப்படுகிறது. இதனடிப்படையில் மீனவர்கள் மீன் பிடித்தலில் முறைகேடான அமைப்பை தவிர்த்தமைக்கு அஞ்சினான் புகலிடமாக அறிவித்தலால் இங்கு அமைதியான முறையில் மீன் பிடித்தல் நடைபெற்று வந்துள்ளது என அறிய முடிகிறது. அடுத்து பத்மநாபபுரம்அரண்மனையில் வைக்கப்பெற்ற அகஸ்தீஸ்வரம் கல்வெட்டில் "பண்டக சாலைக்கு அஞ்சினான் புகலிடமாக நால் எல்லைக்குட்பட்ட சங்கேதம்" என்று காணப்படுகிறது. இந்த கல்வெட்டு பண்டக சாலைக்கு பாதுகாப்பு அளித்தல் குறித்து இப்பகுதியை நான்கு எல்லைக்குட்பட்ட பகுதியை அஞ்சினான் புகலிடமாக அறிவித்து கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இதன் காலம் கி.பி. 15-16ஆம் நூற்றாண்டாகும்.

**கன்னியாகுமரி மாவட்டம் கல்குளத்தில் காணப்படும் கல்வெட்டு**

இக்கல்வெட்டில் "சாலை அகத்துப்பிள்ளையார் கோயிலுக்கு நாலு எல்லைக்கும் கல்லுநாட்டக்குடுத்தது சேரமான் பெருமாள் திருவாசலில் தெனகத்தின் சங்கேதம் சிவமாந்தர் குடி ஏறும்படியும் தெனகத்து ஆவனகற்தார் இடங்கை வலங்கையாக பலதாரக்காரரும் மகாயின்மை செய்யாம அஞ்சினான் புகலிடம்" என்று குறிப்பிடுகின்றது. இதன் குறிப்பு யாதெனின் சேரமான் பெருமான் திருவாசலில் சிறுமாந்தர் குடியேறும்படியும் இவர்களுடன் இடங்கை, வலங்கை மற்றும் பலதாரக்காரர்களுக்கும் இடையூறு ஏற்படாவண்ணம் அமைதல் வேண்டும் என அமைத்த அஞ்சினான் புகலிடமாக இது திகழ்ந்துள்ளது. இவை அனைத்தும் புகலிடம் கேட்டவர்கள் அனைவருக்கும் ஒட்டுமொத்தமாக அளித்த பகுதியாக இவை கருத இடமளிக்கிறது. இதன் காலம் கி.பி 15-16ஆம் நூற்றாண்டாகும்.

இதே மாவட்டத்தில் குமரி மூட்டம் என்ற ஊரில் காணப்படும் கல்வெட்டில் மீனவர்களுக்கு விதித்த வரிகளில் இந்த நான்கெல்லைக்கும் உள்ளே உள்ளவர்கள் மற்றும் இடங்கை, வலங்கை ஆகியோரும் இணைந்து அஞ்சினான் புகலிடமாக கொண்டு வரிவிலக்கை பெற்றமை கூறுகின்றது.

கன்னியாகுமரி மாவட்டத்தில் அகஸ்தீஸ்வரம் வட்டத்தில் பஞ்சவன் காடு என்ற ஊர் கல்வெட்டும் பலதரப்பட்ட மக்கள் வாழும் "வீரகேரள நல்லூர் குடிகள் ஒன்றுபட்ட அஞ்சினான் புகலிடம் என்று கல்லுவெட்டிக் குடுத்தமைக்கு சேனனான சோழ தேவர் தன்மம்" என்ற குறிப்பு காண முடிகின்றது. ஊர் வாழ் மக்கள் அனைவரும் அஞ்சினான் புகலிடம் என அறிவித்து அதற்கு தன்மமும் அளித்த செய்தியை குறிக்கின்றது.

இதனை காணும் பொழுது குறிப்பிட்ட இனத்திற்கோ, குறிப்பிட்ட சமுதாயத்திற்கோ அன்றி பலதரப்பட்ட மக்கள் அனைவரும் இயலாத அனைத்து சமுதாயத்தினருக்கும் காலம் காலமாக அஞ்சினான் புகலிடம் அனைத்தும் காத்து வந்துள்ளமையை இவை தெளிவுபடுத்துகின்றது.

ஆரம்ப கால கட்டங்களில் சமணத்துறவிகள் வாழும் இடங்களில் மட்டும் காணப்பட்ட இவை பின்னர் பௌத்த துறவிகள் காணும் இடங்களில் காண முடிகிறது. பின்னர் வணிகர்கள், மீன்பிடி தொழிலாளர், வலங்கை, இடங்கை பின்னர் அனைத்து சமுதாயத்தினரும் என்று விரிந்து பரந்த இந்த அபய தானத்தை தந்திரிமார்களுக்கும் பின்பற்றி செய்தியை உணர முடிகின்றது.

### கோவை மாவட்டம்

பல்லடம் வட்டம் பட்டணம் என்னும் ஊரில் காணப்படும் கல்வெட்டு வாசகமாவது,

வாயிறைக்கா நாட்டு
மடுக்கொடு அனாதி பாழாய்க் கிடக்கை
யில் இவ்வூர் இந்த நம்பெருமாற்கு ஸ்ரீநாத
பட்டணம் ஆதி செட்டிகளில் மும்முடி
சோழவயிராவணரும் ஸ்ரீ கயிலாய
முடையாரும் அரிய நாயினாரும் வன்னியா
டையாரும் ஆனந்த கூத்தரும் உத்தம நா
திப் பெருமாளும் இந்த ஆறபெரும் இந்தப்பட்
டணம் நானா தெசிப்பட்டணம் ஆகவும் அ
ஞ்சினான் புகலிடம் ஆகவும் குடி (யெ)
ற்றுகையில் இராசராச புரச் சாவ
டிக்குச் செல்லும் எழுகரை
நாட்டிலும் நொய்யிலுக்கு வ
டகரையிலும் கோயிலுக்கும்
சுவர் மடிக்கும் செல்லும்படி

என்று கல்வெட்டு குறிப்பிடுகின்றது. எனவே ஆதிசெட்டிகள் மும்முடி சோழவயிராவனரும் ஸ்ரீகயிலாய முடையாரும், அரியநாயினார், வண்ணியர், ஆனந்த கூத்தர், உத்தமநாதிப்பெருமாள் இந்த ஈறு பெரும் இந்தப்பட்டணம் நானாதேசிகப் பட்டண்ம் ஆகவும் அஞ்சினான் புகலிடமாகவும் அறிவித்து எல்லைக் கல் நாட்டி அருளப்பட்டதை குறிப்பதால் குறிப்பட்ட சிலருக்கும் குருமார்களுக்கும் அஞ்சினான் புகலிடம் அளித்த செய்தியை உணரமுடிகிறது. காலம் கி.பி.15-16ஆம் நூற்றாண்டாகும். இக்கல்வெட்டுகள் மூலம் வணிகர்களுக்கும் அஞ்சினான் புகலிடம் வழங்கியமை தெளிவாக காட்டப்பட்டுள்ளது.

திருமயம் வட்டத்தில் மல்லங்குடியில் காணப்படும் கல்வெட்டில் அஞ்சினான் புகலிடத்துடன் தொடர்பு கொண்ட குறிப்பு காணமுடிகிறது. இதனை குறிக்கும் கல்வெட்டு வாசகமாவது,

விருப்பண உடையாற்கு செல்லா
நின்ற(ப்) பிங்கள ஸ்ரீ ஆனி மாசம்
. . . . . . . . ப்பற்று (தந்திரி) மாற்கும் சா
னவிட்டு தந்திரிமாற்கும்
மற்றும் பாவூறில் தந்திரிமா
ற்கும் மலையாலங்குடி . . . . . . .
. . . . . . . நாவதி கிராம
ம் மெல்லாம் ஆசிரியம் •

ஆசிரியம் என்பது அடைக்கலம் அளித்தமையையே தெரிவிக்கின்றது. மலையாலங்குடி கிராமத்தில் உள்ள அனைத்து தந்திரிமார்களுக்கும் அஞ்சினான் புகலிடமாக அக்கிராமத்தை அளித்துள்ள குறிப்புக்கொண்டு தமிழகத்தில் காலம் காலமாக அனைத்து தரப்பினருக்கும் அஞ்சினான் புகலிடம் அளித்த வரலாறு தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. சமண கோட்பாடுகள் மக்களின் மனதில் நல்லதோர் தாக்கத்தை ஏற்படுத்தி பல சிறந்த செயல்கள் நடைபெற வழிவகுத்துள்ளன என்பதையும் இதன் மூலம் உணரலாம்.

## துணை நூல்கள்


1. மயிலை. சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், நாம் தமிழர் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை-5, 2004.
2. A.R.E. 1934-35 No.22
3. A.R.E. 1933-34 No.35
4. A.R.E. 1933-34 No.62
5. முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இ.ஆ.ப, முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர், தொல்லியல் துறை, சென்னை. அவர்களின் சிறப்பு கல்வெட்டு முனைப்பு திட்டத்தின் கீழ் ஆய்வு மேற்கொண்ட பொழுது காப்பாட்சியர் கோ. அர்ச்சுணன் அவர்களால் நல்லூர், மயிலாடுதுறை வட்டம், நாகை மாவட்டத்தில் கண்டறிந்த கல்வெட்டினை ஒற்றி இக்கட்டுரை தயாரிக்கப்பட்டுள்ளது.
6. முனைவர் சீதாராம் குருமூர்த்தி, முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர், தொல்லியல் துறை, சென்னை.8, கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள், தொ.எண். 491.2004
7. மேற்படி த.நா.க.தொ.எண்.481 2004
8. மேற்படி த.நா.க.தொ.எண்.487 2004
9. மேற்படி த.நா.க.தொ.எண்.488 2004
10. மேற்படி த.நா.க.
11. S.I.I. Vol XXVI vz;222
12. S.I.I. Vol XXIII 156




8

# கல்வெட்டில் பசு மண்டபம்

**கௌதமபுத்திரன்**
தொல்லியல் அலுவலர், கோவை

தமிழகக் கல்வெட்டுகளில் "நந்தி மண்டபம்" என்ற சொற்றொடர் காணப்படுகின்றன. ஆனால் "பசு மண்டபம்" என்ற சொல் திருப்பூர் மாவட்டம், பல்லடம் வட்டம் சித்தனாயக்கன்பாளையம் கிராமத்தில் கி.பி. 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பத்திரகாளியம்மன் கோயில் கல்வெட்டில் உள்ளது. இக்கோயிலின் விமானம் திராவிடர் கட்டடக் கலைப்பாணியில் அமைந்துள்ளது. இக்கோயில் கருவறை, அந்தராளம், அர்த்தமண்டபம், மகாமண்டபம் திருச்சுற்றுமாளிகை ஆகிய அமைப்பில் உள்ளது. இத்திருச்சுற்று மாளிகையின் வடக்குபுறம் பலகை நிலைக் கல்லில் கல்வெட்டு ஒன்று உள்ளது.

இக்கல்வெட்டுச் செய்தியானது இவ்வூர் கோயிலுக்கு சித்தனாயக்கன் பாளையம் கிராமத்தைச் சார்ந்த, மோர்வந்தி நாயக்கன் மகன் யவனப்பனாயக்கன் என்பவன், தன் சொந்த செலவில் பசு மண்டபம் ஒன்றினைக் கட்டுவித்தான் என்பதாகும்.

கொங்கு நாட்டில் தொல்பழங்காலத்திலிருந்து கால்நடைகள் வளர்ப்பதும், கால்நடைகள் ஒரு செல்வமாகவும் இருந்துள்ளது. மேலும் கொங்கு மக்கள் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு பசுமாடுகள் செல்வம் தரும் கோமாதவாக இருந்ததினால் பசுவுக்கு மண்டபம் கட்டி வழிபாடு செய்துள்ளனர். இன்றளவும், திருப்பூர் மாவட்டம் காங்கேயம் போன்ற பகுதிகளில் கால்நடைகளுக்கு தனிவழிபாடு நடத்தி வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

***கல்வெட்டு***

1. சுபம மஸ்து ஸ்வ
2. திஸ்ரீ விசய க
3. லி யுக சகாப் த
4. ம் சகூஅாய

5. ல் சாலிவாகன
6. சகாப்தம் தூ அா
7. ந கீழக ஞ
8. சஎ அாயி எ
9. மேல் செல்ல
10. நின்ற விய ஞ தை
11. மீ உயிந தே
12. தி சனிக்கிழமையும்
13. ஏகாதாசியும்
14. மிருக சீருச
15. ம் நட்ச்
16. சத்திரமும் ந
17. டந்த சுபதினத்தில்
18. சித்தநாயக்காழியப
19. ம் மோருவந்தி
20. னாயக்கன் மகன் ய
21. வனப்பநாயக்கன்
22. கட்டின பசு
23. மண்டபம்
24. . . . . பிரதிஷ்டை செய்தது.



# 9

# இஞ்சிமேடு

**து. துளசிராமன்**
காப்பாட்சியர், பூண்டி

### அமைவிடம்

இஞ்சிமேடு கிராமம் திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசி வட்டத்தில் பெரணமல்லூருக்கு தென்மேற்கே சுமார் 7 கி.மீ. தூரத்தில் உள்ளது.

### ஊர் பெயர் காரணம்

அக்காலத்தில் இவ்விடத்தில் இஞ்சி அதிகம் விளைந்ததால் இவ்வூர் ‘இஞ்சிப்பேறு’ என அழைக்கப்பட்டு, பின் ‘இஞ்சிப்பேடு’ என ஆகி, ‘இஞ்சிவேடு’ என மருவிற்று. தற்சமயம் இவ்வூர் ‘இஞ்சிமேடு’ என்றழைக்கப்படுகிறது.

### பெரிய மலையும் கோயிலும்

இஞ்சிமேடு ஊருக்கு மேற்கே பாறையாலான ஒரு மலை உள்ளது. இதனை இவ்வூர் மக்கள் பெரிய மலை என்று அழைக்கின்றனர். இம்மலை மீது ஒரு சிவலிங்கமும் சிறிய வினாயகர் கோயிலும் உள்ளன.

### நீர்ச்சுனையும் கல் உரலும்

மலைமீது கொஞ்ச தூரம் ஏறியதும் வடக்கு பக்கத்தில் இயற்கையாக அமைந்த ஒரு நீர்ச்சுனை உள்ளது. சுனைக்கு தென்புறத்தில் உள்ள பாறையில் ஒரு வட்ட வடிவ உரல் வெட்டப்பட்டுள்ளது. உரல் வெளிப்புறமாக 48 செ.மீ. விட்டமும் உட்புறமாக 20 செ.மீ. விட்டமும் 28 செ.மீ. ஆழமும் கொண்டுள்ளது.

### குகை

மலைக்கு மேற்குபுறத்தில் இயற்கையாய் அமைந்த குகை ஒன்று உள்ளது. இக்குகை 450 செ.மீ. நீளமும் 120 செ.மீ. அகலமும் கொண்டதாக உள்ளது. இதற்கு மிகவும் குறுகிய வாயிலுள்ளது. இக்குகைக்குள் பிற்காலத்தில் கட்டப்பட்ட படுக்கை அமைப்புள்ளது. இப்படுக்கை 108 செ.மீ. நீளமும் 45 செ.மீ. அகலமும் 15 செ.மீ. உயரமும் உடையதாக செங்கற்களால் கட்டப்பட்டுள்ளது. சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்பு இக்குகையில் ஒரு சாமியார் வசித்து வந்ததாகவும் அவர் இம்மலைமீது உள்ள லிங்கத்திற்கு வழிபாடு செய்து வந்ததாகவும் கூறப்படுகிறது.

## சிவலிங்கம்

வினாயகர் கோயிலுக்கு மேற்கே 10 மீட்டர் தொலைவில் பெரிய சிவலிங்கம் ஒன்று உள்ளது. இச்சிவலிங்கம் 18 செ.மீ. உயரமுள்ள பத்மபீடத்தின் மீது அமைக்கப்பட்டுள்ளது. அதாவது 98 செ.மீ. விட்டமுடைய ஆவுடையார் மீது 52 செ.மீ. உயரமுள்ள லிங்கம் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது. முதலில் இச்சிவலிங்கம் செங்கல் கருவறைக் கட்டிடத்திற்குள் இருந்திருக்க வேண்டும். பின்னர் இச்செங்கற் கட்டடம் முழுவதுமாக இடிந்து போனது. தற்போது இங்கு லிங்கத்தின் மீது கோயில் ஒன்று எழுப்பப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

புதியதாகக் கட்டப்பட்டுள்ள வினாயகர் கோயிலிலிருந்து சிவலிங்கமுள்ள கோயிலுக்குச் செல்ல படிகள் அமைக்கப்பட்டுள்ளன. படிகளுக்கு வலது பக்கத்திலுள்ள பாறையில் கிரந்தமும் தமிழும் கலந்த ஏழுவரிகள் கொண்ட கல்வெட்டு ஒன்று உள்ளது. அக்கல்வெட்டு வாசகம் பின்வருமாறு :

1. ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரம சோழ தே
2. வற்கு யாண்டு எட்டாவது இஞ்
3. சிவேடு நாட்டு திருமணிச் சே
4. றை உடையார் பெருங்கூர் நாட்டு
5. மேன் மாவில் மணலி கிழான் சேந்
6. தன் திருவாலாங்காடுடையான் செ
7. ய் வித்த திருக்கெளிற்றுப் படி.

## செய்தி

இக்கல்வெட்டில் விக்கிரமசோழனின் எட்டாவது ஆட்சியாண்டில் (கி.பி.1126) இஞ்சிவேடு நாட்டு திருமணிச்சேறை உடையார்க்கு பெருங்கூர் நாட்டு மேன்மாவிலைச் சேர்ந்த மணலிகிழான் சேந்தன் திருவாலங்காடுடையான், திருக்கெளிற்றுப்படி அமைத்துக் கொடுத்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

### படிகள்

இக்கோயிலுக்குச் செல்லப்பாறையை வெட்டி படிகள் அமைக்கப்பட்டுள்ளன. மொத்தம் 7 படிகள் உள்ளன. ஒவ்வொரு படியும் 60 செ.மீ. நீளமும் 15 செ.மீ. அகலமும் கொண்டதாக உள்ளது. இப்படிகளை பெருங்கூர் நாட்டு மேன்மாவிலைச் சேர்ந்த மணலிக்கிழான் சேந்தன் திருவாலங்காடுடையான் என்பவர் அமைத்துக் கொடுத்தான் என்னும் செய்தியை கல்வெட்டின் மூலம் அறியலாம்.

மேலும் இங்குள்ள கல்வெட்டின் மூலம் இக்கோயில் விக்கிரமசோழன் காலத்திற்கு முன்பே கட்டப்பட்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.

## குள்ள ரெட்டிப் பாறை கல்வெட்டு

சிவலிங்கம் அமைந்துள்ள பெரியமலைக்கு தென்கிழக்கே குள்ள ரெட்டிபாறை அமைந்துள்ளது. இப்பாறையில் 8 வரிகள் கொண்ட தமிழ் கல்வெட்டு ஒன்று உள்ளது. அக்கல்வெட்டு பின்வருமாறு :

1. ஸ்வஸ்திஶ்ரீ
2. பிராபவத வருஷம் கார்த்திகை
3. மாதம் சா௳ வீரதிப்பப் (ப) நாய்க்கர்
4. அய்யன் உம்பிலிக்கைக்
5. கிறாமமான இஞ்சிவேடு
6. ஏரி உடைப்பு கட்டிவித்து
7. ஏரி கீழ் ஓட இப்பற்றும் மலையடித்
8. தாக்கல் படைவீடு மங்காசாரி அய்யன்பு

இக்கல்வெட்டு எழுத்தமைதியால் கி.பி. 17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இதில் குறிக்கப்பெறும் பிராபவ ஆண்டை வைத்து இக்கல்வெட்டு கி.பி.1627-ஆம் ஆண்டில் வெட்டப்பட்டிருக்கலாம் என அறியமுடிகிறது. படைவீட்டிலிருந்து அரசாண்ட வீரதிப்ப நாய்க்கரின் அதிகாரி மங்காச்சாரி அய்யன்பு என்பவன் இஞ்சிவேட்டிலுள்ள ஏரி உடைப்பை சரி செய்து கொடுத்தான் என்னும் செய்தி இதில் குறிக்கப்பட்டுள்ளது.



# 10

# வட்டெழுத்து – வணிகர் தந்தது

**ர. பூங்குன்றன்**
பதிவு அலுவலர் (ஓய்வு)

அண்மைக் காலத்தில் கண்டுபிடிக்கப் பெற்ற நடுகற்களில் காணப்பெறும் எழுத்து வடிவங்கள் குறிப்பிடத்தக்க வேறுபாடுடன் காணப்பெறுகின்றன. அகரஞ்சேரி, விழுப்புரம் ஆகிய ஊர்களில் கண்டுபிடிக்கப்பெற்ற வட்டெழுத்து நடுகற்களில் காணப்பெறும் எழுத்து வடிவங்கள் ஏற்கனவே பூலாங்குறிச்சி அம்மங்கோயில்பட்டி அறச்சலூர் ஆகிய ஊர்களில் கண்டுபிடிக்கப் பெற்ற வட்டெழுத்துக் கல்வெட்டுகளுடன் ஒப்பிடத்தக்கவை. அகரஞ்சேரி நடுகல் தமிழ் எழுத்தும், வட்டெழுத்தும் கலந்து எழுதப்பெற்றுள்ளன.

கால்நடை வளர்ப்பு சமூகத்தில் எழுத்துப் பயன்பாடு குறைவென்றும், அது எழுதி வைக்க வேண்டிய அவசியம் இல்லாத வாழ்க்கை என்றும் ஆய்வாளர் கூறுவர். வேதகால ஆரியர், ஆப்பிரிக்க மாசாய், நீலகிரி தோதர்கள் போன்ற கால்நடை வளர்ப்புக் குடிகளிடையில் எழுத்தின் உபயோகம் இல்லையென்பதை ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன. இந்தப் பின்னணியில் நடுகல் சமுதாயத்தினரின் எழுத்துப் பயன்பாட்டினை நோக்குதல் வேண்டும். தொடக்கத்தில் எழுத்தின்றி நடுகல் வைத்துப் பழகினர். பின்னர் ஓவியம் உருவானது. பின்னர் எழுத்து அறிமுகப்படுத்தப்பட்டது. பல்லவர்களுக்கு முன்பே வட்டெழுத்து நடுகற்கள் கிடைக்கின்றன. மேலும் பல்லவ அரசின் எழுத்து தமிழ் எழுத்து. அவர்தம் அரசு ஆவணங்களில் வட்டெழுத்து யாண்டும் பயன்படுத்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆகையால் அரசியல் செல்வாக்கால் வட்டெழுத்து இங்கு வந்தடையவில்லை. பெரும்பாலும் வணிகர்கள் வட்டெழுத்தினை அப்பகுதியில் அறிமுகப்படுத்தியிருக்க வேண்டும்.

வணிகம் இந்தியா முழுவதும் எழுத்து அறிமுகம் ஆவதற்குக் காரணமானது என்ற கருத்து நிலவுகின்றது. ஆகையால் நடுகல் வட்டெழுத்து வணிகர் மூலம் நடுகல் பகுதிக்குக் கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும் என்று கருதலாம்.

செங்கம் - தருமபுரிப் பகுதியில் வணிகத் தொடர்பு சங்ககாலம் முதல் இருந்து வந்தது. செங்கம் மாநகரில் இருந்த "நியமம்" பற்றி மலைபடுகடாம் கூறும். நியமம் வணிக சங்கத்தைக் குறித்து வந்தது. மேலும் வணிக நகரத்தினையும் குறித்தது. சங்க காலத்தில் பலபெரு வழிகள் தருமபுரி வழியாக மொழி பெயர்தேயத்திற்குச்

சென்றடைந்தன. இந்தப் பெருவழி மொழிபெயர் தேயத்திற்குச் சென்று வந்த வணிகர்கள் நடை கொண்ட பெருவழிகள். சங்ககாலத்தில் வாணிகர் தொடர்பு இருக்கும்போது அப்போதைய எழுத்தான தமிழ்ப்பிராமி எழுத்தினை அறிமுகப்படுத்தியிருக்கலாம் என்று கருத வாய்ப்புண்டு. அவ்வாறு அறிமுகப்படுத்தும் வாய்ப்பு இல்லையென்றே தோன்றுகிறது. காரணம் அவர்கள் பெருவழியில் சென்றுவந்த போதும் தங்கியிருந்தது வணிகத் தலங்களில் ஆகும்.

சங்க காலத்து வாணிகம் வீழ்ச்சியடைந்த பின் அவர்களே கால்நடை வணிகர்களாக மாறியிருக்க வேண்டும். கால்நடை வணிகர்களாக மாறியபோது அவர்கள் நடுகல் பகுதியில் தங்கினர். நடுகல்லில் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் பதினோறாம் நூற்றாண்டு வரை வணிகர்கள் குறிக்கப்படுவது இதற்கு ஆதரவாக நிற்கின்றது. இந்தப் பின்னணியில் வட்டெழுத்து திடீர் என்று அறிமுகமாவதை அணுக வேண்டும். பெரும்பாலும் வணிகர்களே இந்த எழுத்தினை அறிமுகப் படுத்தியிருக்கலாம். போளுவாம்பட்டி, அம்மங்கோவில் பட்டி, அறச்சலூர் போன்ற இடங்களில் வணிகர் தொடர்பான கல்வெட்டுகள், பானை பொறிப்புகள் கிடைக்கின்றன. அவை கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஆறாம் நூற்றாண்டு வரையிலான காலத்தினைச் சேர்ந்த வட்டெழுத்துக் கல்வெட்டுகள், பொறிப்புகளாம்.

தமிழ்நாட்டின் வடபகுதியில் கிடைக்கின்ற நடுகற்களில் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் தாம் காலத்தால் முற்பட்டவை. கி.பி. 4-5ம் நூற்றாண்டிலிருந்து பொறிக்கப்பெற்ற வட்டெழுத்து கல்வெட்டுகள் தருமபுரி, செங்கம் பகுதிகளில் மிகுதியும் கிடைக்கின்றன. இருளப்பட்டி புலியானூர், அகரம் சேரி, கொட்டையூர், கோரையாறு ஆகிய ஊர்களில் கிடைக்கின்ற கல்வெட்டுகள் தொடக்ககால வட்டெழுத்துக் கல்வெட்டுகள். தென்பகுதியில் பூலாங்குறிச்சிக் கல்வெட்டுகள் தாம் காலத்தால் முற்பட்ட வட்டெழுத்துக் கல்வெட்டுகள்.

பூலாங்குறிச்சிக் கல்வெட்டுகள் அரசமரபினர் பொறித்த, தமிழ் இலக்கண மரபில் எழுதப் பெற்ற கல்வெட்டுகள். இக்கல்வெட்டுகளில் எகர ஒகரத்திற்குப் புள்ளியிடப் பெற்றுள்ளன. ஒற்றெழுத்துக்களுக்கும் புள்ளியிடப் பெற்றுள்ளன. சந்தி விதிகள் மிகுதியும் பின்பற்றப்பட்டுள்ளன. அரசமரபினர் வைத்திருந்த தமிழ் இலக்கணம் நன்கு அறிந்த எழுத்தர்களே இக்கல்வெட்டுகளைப் பொறித்தனர் எனலாம்.

தமிழ் இலக்கணமுறைப்படி பூலாங்குறிச்சிக் கல்வெட்டு எழுதப் பெற்றது என்பதை பேராசிரியர் சுப்பராயலு அவர்கள் எடுத்துக்காட்டிய சான்றுகள் மூலம் விளக்கலாம். இக்கல்வெட்டில் பயின்று வரும் 'உலாவியப் பெருந்திணை' என்ற சொற்கோவையை விளக்க வந்த முன்னாள் இயக்குநர் நாகசாமி அவர்கள் வடமொழியில் பயின்று வரும் 'சஞ்சாரகர்' என்ற அதிகாரிப் பெயரை தமிழில் 'உலாவியப் பெருந்திணை' என்று பெயர்த்துள்ளார்கள் என்று கூறுவார். சஞ்சாரகர என்று பெயர்த்தெழுதும் போது 'உலாவிய' என்பதை சொல் பெயரெச்சமாகக் கொள்ள வேண்டி வரும். ஆனால் 'உலாவியப் பெருந்திணை' என்பதில் ஒற்று மிகுந்துள்ளமையால் இது பெயரெச்சமாகக் கொள்ளமுடியாது. 'உலாவியத்தான்' என்ற மன்னனுடைய அதிகாரி என்றுதான் கொள்ளமுடியாது என்பது பேராசிரியர் சுப்பராயலு அவர்கள் கருத்து.

செங்கம், தருமபுரிப் பகுதியில் தொடக்ககால வட்டெழுத்துக் கல்வெட்டுகள் பிழையின்றி இலக்கணமரபுடன் எழுதப்பெற்றுள்ளன. அதே காலத்தைச் சேர்ந்த பெருங்களத்தூர், அகரம் சேரி ஆகிய ஊர்களில் பொறிக்கப் பெற்ற வட்டெழுத்துக் கல்வெட்டுகள் பிழையொடு காணப்பெறுகின்றன.

பெருங்களத்தூர் நடுகல் கல்வெட்டில் பல எழுத்துப் பிழைகள் உள்ளன. தொடங்கும்போது கோவிசைய என்பதில் எழுத்துகள் விடுபட்டுள்ளன. ' ' என்பதை ' ' என்று இறுதி னகரத்தைத் தலைகீழாக எழுதியுள்ளனர். அகரம் சேரிக் கல்வெட்டில் 'ஆடித்திங்கள்' என்பதை 'ஆட்டித் திங்கள்' என்றும், 'ஞான்று' என்பதை 'ஞாறு' என்றும் 'கங்கதி அரைசர்' என்பதை 'கங்கதிரைசர்' என்றும் எழுதியுள்ளார்கள். 'புனர்பூசத்து' என்பதை 'பூணர்புசது' என்று எழுதியுள்ளார்கள். இக்கல்வெட்டு பல்லவ அரசர் ஆளுகைக்குட்பட்ட பகுதியில் இருப்பதாலும், தலைநகர் காஞ்சிபுரம் அருகில் இருப்பதாலும் வட்டெழுத்து, தமிழ் எழுத்து ஆகிய இரண்டுவகை எழுத்துகளும் கலந்து எழுதப்பெற்றுள்ளன எனலாம். சான்றுக்கு இருபத்தொன்பதாவது என்பதில் 'இ' என்ற எழுத்து ' ' என்றும் ,வட்டெழுத்து 'த்' என்பது ' ' என்று தமிழ் எழுத்திலும், 'வா' எனபது ' ' என்று வட்டெழுத்திலும் து என்ற எழுத்து ' ' என்று வட்டெழுத்திலும் பொறிக்கப்பெற்றுள்ளன. 'தொ' என்ற எழுத்தை எழுதும்போது ' ' என்று கொம்பையும், காலையும் வட்டெழுத்து மரபில் கொண்டு எழுதப்பெற்றுள்ளது. வட்டெழுத்தும் , தமிழ் எழுத்தும் கலந்து எழுதப்பெற்ற மரபு இக்கல்வெட்டில் பயின்று வருகின்றது. வட்டெழுத்தில் தமிழ் எழுத்து மரபு கலந்து நிற்பது பெரும்பாலும் பல்லவ அரசு செல்வாக்கினால் ஏற்பட்ட மரபாகலாம்.

கோரையாறு, இருளப்பட்டி ஆகிய ஊர்களில் பொறிக்கப்பெற்ற வட்டெழுத்துக் கல்வெட்டுகள் அப்பகுதியில் ஆண்ட சிற்றரச மரபினர் முயற்சியில் எழுதப் பெற்றவையாகலாம். இருளப்பட்டி நடுகல்லில் 'பாண பருமரைசரு' என்று தொடங்குகின்றது. அதனால் இப்பகுதி பாணர் என்ற மரபினர் ஆட்சிக்குட்பட்டதாகலாம். அதுவும் அதியமான்கள் தெற்குநோக்கி நாமக்கல் பகுதிக்குக் குடிபெயர்ந்தமையால் இந்த நிலை ஏற்பட்டிருக்கலாம். இந்தப் பாணர் மரபினர் அனந்தபுரம் பகுதிக்குச் சென்று பின் தருமபுரிக்குப் பெயர்ந்தவர்கள். இவர்கள் வருவதற்கு முன்பும், இவர்கள் வந்தபின்பும் மாடுபிடி சண்டை மற்றும் சிற்றரசர் சண்டை தொடர்ந்து நடந்து கொண்டேயிருந்தது. இந்தச் சண்டையில் இறந்தவர்கள் பற்றி எழுதிவைக்கவில்லை. சங்க இலக்கியத்தில் குறிப்புகள் உள்ளன.

கி.பி. 4-5ஆம் நூற்றாண்டிலிருந்து நடுகல்லில் எழுதும் பழக்கம் இப்பகுதியில் உருவாயிற்று. அதற்கு முன்பு இங்குக் கிடைக்கவில்லை. அதனால் சங்க காலத்தில் இங்கு எழுதும் பழக்கம் இல்லை எனலாம். கி.பி 4ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற இருளப்பட்டி நடுகல்லில் என்று தொடக்ககால வட்டெழுத்தில் எழுதப்பெற்றுள்ளது. மேலும் (கொற்றந்தை) என்று எழுதப்பெற்றுள்ளது.

பாண்டிய நாட்டு நடுகற்கள் கி.மு. 4-3-ஆம் நூற்றாண்டு தமிழி எழுத்தில் உள்ளன. ஆனால் தருமபுரிப் பகுதியில் கி.பி. 4-ஆம் நூற்றாண்டிலிருந்துதான் கிடைக்கின்றன. இது மட்டுமின்றி சங்ககால தமிழி இப்பகுதியில் பயன்படுத்தப்பட்டதற்கான சான்றும் கிடைக்கவில்லை. அதனால் கி.பி. 4-ஆம் நூற்றாண்டிலிருந்துதான் இப்பகுதியில் எழுத்தின் பயன்பாடு தேவைப்பட்டது. அந்தத் தேவையை பாண்டிய நாட்டு வணிகர்களே பூர்த்தி செய்திருக்க வேண்டும்.



எண்பட்டை வடிவ 50 டாலர் தங்கக் காசு



முன்பக்கம்



பின்பக்கம்



வரமணகுண்டா - கல்திட்டை



திருப்பாச்சூர் - நால்வர் திருவிழா கல்வெட்டு



விளாங்காடுபாக்கம்
கி.பி. 9-ஆம் நூற்றாண்டு
துண்டு கல்வெட்டு



திருநெல்வேலி மாவட்டம், இராஜாக்கள் மங்கலத்தில்
20-5-2010 அன்று தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
மேற்கொள்ளும் அகழாய்வு பணி தொடக்க விழாவின்போது
"தமிழ்நாடு கல்வெட்டுகள் தொகுதி-3" என்ற நூலினை
மாண்புமிகு பள்ளிக் கல்வி (ம) தொல்லியல் துறை அமைச்சர்
திரு. தங்கம் தென்னரசு அவர்கள் வெளியிட்டார்கள். உடன்
மாண்புமிகு சுற்றுச் சூழல் துறை அமைச்சர்
திரு. டி.பி.எம். மைதீன்கான் அவர்கள், திரு. எஸ். இராமசுப்பு, எம்.பி.
தொல்லியல் துறை முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்
முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இஆப,
திருநெல்வேலி மாவட்ட ஆட்சித் தலைவர்
திரு. எம். ஜெயராமன், இஆப, திரு. கருப்புசாமிபாண்டியன், எம்.எல்.ஏ.



விஜயரகுநாத சேதுபதி செப்பேடு